ஸ்ரீ

# ஆண்டாள் பற்றிய ஆராய்ச்சி

தொன்மையான தமிழ் இலக்கியங்களின் அடிப்படையில் வலுவான ஆதாரங்களைக் கொண்டு ஸ்ரீ ஆண்டாள் நாச்சியாரின் வாழ்க்கை அவர் தந்தருளிய அருளிச்செயல் இவற்றை ஒப்பற்ற முறையில் ஆராய்ந்த ஆய்வுகளின் தொகுப்பு



( இலவச வெளியீடு )

தொண்டர் தொண்டன் சடகோபனடிமை

ஸ்ரீ:

ஆன்மிகம் தழைத்தோங்கும் நாடான பாரதத்தில் தோன்றிய இறையாளர்கள் அநேகம். அவர்களில் இறைவனால் பிறப்பிக்கப்பட்டவர்கள் பலர். தமிழ் மண்ணில் அப்படி அவதரித்த ஆழ்வார்கள் இறைவனால் மயர்வற மதிநலம் அருளப்பட்டவர்கள். 'திவ்யம்' என்கிறதான ஞானத்தை இறைவன் அவர்களுக்கு அருளினான். ஆழ்வார்களும் 'ஒன்றே பரம்பொருள் ' என்பதை அறுதியிட்டுக்கூறி அதனுடைய எண்ணிலடங்கா கல்யாண குணங்களை பரவசத்துடன் 4000 பாக்களால் பாடி நமக்கு 'திவ்ய பிரபந்தம்' என்னும் பொக்கிஷத்தை கொடுத்துச் சென்றிருக்கிறார்கள்.

இறைவனின் திருவுள்ளப்படி படைக்கப்பட்டவர்கள் என்பதாலேயே ஆழ்வார்களுடைய பிறப்பும் வளர்ப்புமே ஆச்சர்யமானது. மலரிலிருந்து பிறந்தவர்கள், நெற்கதிர்களுக்கிடையே கண்டெடுக்கப் பட்டவர், பிண்டமாய் பிறந்து குழந்தையாய் உருவெடுத்தவர், துளசி வனத்தில் கண்டெடுக்கப்பட்டவர், பிறந்து பலகாலம் வாய் திறவாதிருந்து 16 வருடங்களுக்கு மேல் சாம வேத சாரமாக 1102 தமிழ்ப்பாக்கள் கொண்ட பிரபந்தத்தை பாடியவர் - என்று இப்படி பலப்பல. இறை நினைவு தவிர "வேறொன்றும் நானறியேன்" என்று இறையுணர்வு பொங்கி பெருக்கெடுத்தது ஆழ்வார்களுக்கு. இந்த ஆன்மீகத் தேடலின் மூலம் ஆழ்வார்களுக்கு ஏற்பட்ட ஞானம் பக்தியாக பரிணமித்து வெள்ளமாய் பெருக்கெடுத்து தானான நிலையில் பாடி திருப்தியுறாது, தலைவி நிலையிலும், தலைவியின் தாய் நிலையிலும், தலைவியின் தோழி நிலையிலும் தங்களை ஆட்படுத்திக் கொண்டு இறைவனை பாடி பரவசம் அடைந்தார்கள். இறைவனுடன் இரண்டற கலப்பதே பிறவிப்பயன் என்று திண்ணமாக இருந்தார்கள். இறைவனின் தேவியர்கள் அம்சமாக அவதரித்த ஸ்ரீ ஆண்டாள் "அவனல்லாது வேறு எந்த மானிடரையும் மணக்க மாட்டேன்" என்று சபதமுறைத்தாள். இதன் பிரதிபலிப்புதான் "நாச்சியார் திருமொழி" யாக மலர்ந்தது.

(தொடர்ச்சி 3ஆம் அட்டை

ஸ்ரீ

# ஆண்டாள் பற்றிய ஆராய்ச்சி

தொன்மையான தமிழ் இலக்கியங்களின் அடிப்படையில் வலுவான ஆதாரங்களைக் கொண்டு ஸ்ரீ ஆண்டாள் நாச்சியாரின் வாழ்க்கை

அவர் தந்தருளிய அருளிச்செயல் இவற்றை ஒப்பற்ற முறையில் ஆராய்ந்த ஆய்வுகள் மற்றும் கருத்துரைகளின் தொகுப்பு

**தொண்டர் தொண்டன் சடகோபனடிமை**

# 1. தமிழை உயர்த்துகிறேன் என்று சறுக்கி விழுந்த வைரமுத்து

அறிஞர்கள் கட்டுரை எழுதினால் அதில் ஆயிரம் குற்றம் சொல்லும் தினமணி- வைரமுத்து துப்பிய குப்பையை அரங்கேற்றியிருக்கிறது.

பாரதியைத் தொட்டு, கம்பரைத் தொட்டு, உ.வே.சா வைத் தொட்டு. திருமூலரைத் தொட்டு. கடைசியில் ஆண்டாளிடம் வந்த கவிழ்ந்த சோகம். ஆண்டாளின் தெய்வத் தமிழை கூறுகூறாக்கி வைரமுத்து தன் அறியாமைச் சட்டியில் வாட்டியெடுத்து வறுவலாக்கி தந்த அவலம் நிகழ்ந்தே விட்டது.

எழுதினவர் ஏட்டைக் கெடுத்தார்; பிரசுரித்தவர் பத்திரிக்கையைக் கெடுத்தார் என்று, பாரம்பரிய மிக்க தினமணி, வைரமுத்துவின் வார்த்தைகளை வரிவிடாமல் அச்சடித்து - ஆண்டாளை அன்றாடம் வணங்கும் அத்தனை பக்தர்களின் உள்ளத்திலும் - திராவகத்தை வீசி தன் பெருமையைக் குறைத்துக் கொண்டது.

எந்த ஒரு நூலைப் பற்றியும் ஆராய மூன்று செய்திகள் முக்கியமாகக் கருதப்படும்.

1. நூல் பெருமை (பிரபந்த வைலட்சண்யம்)
2. நூல் பொருள் பெருமை (விஷய வைலட்சண்யம்)
3. நூலாசிரியர் பெருமை (வக்த்ரு வைலட்சண்யம்)

நூலை ஆராய முற்படுபவர்க்கும் இது பொருந்தும்.

ஆண்டாளின் தமிழை ஆராயும் தகுதி தனக்கு இருக்கிறதா என்பதைப் பற்றி சற்றும் கவலைப்படவில்லை வைரமுத்து,

ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கருத்து இவ்வுலகத்தில் உண்டு. அவரவர் கருத்தை அவரவர் ஏற்பர். பின்பற்றுவர்.

ஆனால்,

தன் உள்ளத்துக்கு ஏற்காத கருத்தை தான் தோன்றித்தனமாக ஆராய வேண்டிய அவசியம் என்ன ? இது தமிழை எவ்வாறு உயர்த்தும் ?

1) ஆண்டாள் பெரியாழ்வார் பெண் என்பதை இவர் நம்பவில்லை.
2) ஆண்டாள் துளசி வனத்தில் கிடைத்த பூமாதேவியின் அம்சம் என்பதை இவர் நம்பவில்லை.

3) ஆண்டாள் எங்ஙனம் 8-ம் நூற்றாண்டில் இத்தகைய புரட்சிக் கருத்தைப் பாட முடிந்தது என்கிற ஐயப்பாடு இவருக்கு.

4) கல்லான கடவுள் பிம்பத்துடன், இரத்தமும் சதையும் கொண்ட பெண் கலக்க முடியுமா என்கிற சந்தேகம் இவருக்கு.

இப்படி ஆயிரம் சந்தேகங்களோடு ஆண்டாளை அணுகும் வைரமுத்து எவனோ ஒருவன் ஆங்கிலத்தில் எப்போதோ எழுதிய கட்டுரையின் வரியை மட்டும் வைத்து ஸ்ரீரங்கத்து தாசி என கொஞ்சமும் நடுக்கமின்றி எழுதவும், உரத்த குரலில் பேசவும் துணிகின்றார் என்றால், வைரமுத்துவின் உள்நோக்கம் ஆண்டாளை உயர்த்துவதா ? தமிழை உயர்த்துவதா ?

அரிதாரத்தைக் கழற்றிவிட்டால் திரைப்பட நடிகையின் அசல் அழகு தெரிந்து விடும் என்பார்கள். ஆர்ப்பாட்டமான - வலிந்து அலங்கரிக்கப்பட்ட - பாசாங்கான - தமிழ்நடையைக் கழற்றி விட்டு வைரமுத்துவின் உள்ளீட்டான செய்தியை உற்றுப் பார்த்தால் (இதற்குமுன் எழுதிய கட்டுரைகளில் கூட) மேலோட்டமான அணுகுமுறையும், முரண்பாடான கருத்துக்களும் பளிச்செனத் தெரியும்.

எனக்கு உள்ள வருத்தமெல்லாம் வைரமுத்துவின் மீது மட்டுமல்ல. அவரை - அவர் எப்படி அணுகுவார் என்று தெரிந்தும் - வானளாவத் தூக்கி - அவரைப் பேசவைத்த தினமணியின் மீது தான் !

இது குறித்து தினத் தந்தி தொலைக்காட்சியில் ஓர் விவாதம் நடந்தது.

அதில் ஓவியா என்பவர் சொல்கிறார். 'இந்து மதம் அழிய வேண்டியமதம். உங்கள் மனது புண்படும் என்பதற்காக ஆராய்ச்சி செய்யாமல் இருக்க முடியாது என்கிறார். உங்களுக்கு மாற்றுக் கருத்து இருந்தால் வெளியிட வேண்டியது தானே' என்கிறார்.

வைரமுத்து ஒரு பக்கம் முழுக்க ஆண்டாளை ஆராய்கிறேன் பேர்வழி என்று தினமணியில் எழுதிவிடுவார். உங்கள் மாற்றுக் கருத்தை இதே தினமணி இதே முக்கியத்துவம் கொடுத்து போடுமா ? மூலையில் போடுமா ?

எல்லோரும்-வைரமுத்து கட்டுரையில் ஆண்டாளை திருவரங்கத்தில் இருந்த தாசி - என்ற ஒரு வரியைத் தவிர மீதி எல்லாம் ஆண்டாளைப் போற்றுகின்ற அருமையான வரிகள்தான் என்கிறார்கள்.

மாலன்கூட விளக்கெண்ணையில் வெண்டைக்காயை நனைத்தது போல பட்டும் படாமல் ஒரு கருத்தைச் சொல்லிவிட்டு, பிறகு தாசி என்ற மேற்கொள் கருத்தைத் தவிர்த்திருக்கலாம் என்கிறார்.

இங்கே கவனிக்க வேண்டிய முக்கியமான ஒரு செய்தி, தமிழ் இலக்கண இலக்கியப் புலமையைக் கொண்டு மட்டும் திருப்பாவையை - நாச்சியார் திருமொழியை ஆராய்வது - ஆண்டாளின் நோக்கத்தை முழுமையாக வெளிக்கொணர வகை செய்யாது என்பதை உணர்வதேயாகும்.

திருப்பாவை வைணவ நூல். திருமாலை தனிப்பெருங் கடவுளாகக் கொண்ட நூல். தமிழ் நூல்.

அதில் வழங்கும் பல சொற்றொடர்கள் வைணவச் சமய ஒழுங்கினைப் புரிந்து கொண்டவர்க்கே விளங்கும். இதற்கு தமிழ்ப்புலமை மட்டும் பயன்படாது.

சமயநெறி சார்ந்த தத்துவ நூல் என்பதால் வேதாந்தம் படித்தவர்க்கும் கூட திருப்பாவை புரிந்து கொள்வது கடினமாகவே இருக்கும்.

அதனால்தான், வடமொழியில் கடினமான பிரம்ம சூத்திர வித்தைக்கு அழகாக விளக்கவுரை செய்த ஸ்ரீராமாநுஜர் திருப்பாவைக்கு உரை சொல்ல என்னால் முடியாது என்றார்.

வைரமுத்துவைவிட ஆயிரம் மடங்கு பன்மொழிப் புலமையும், தத்துவப் புலமையும் மிக்கவர்கள் உரையாசிரியர்கள்.

தனிநூல் செய்யும் ஆற்றல் மிக்க அவர்கள், ஆழ்வார்களின் ஈரத்தமிழை அணுஅணுவாக ரசித்து, பற்பல கோணங்களில் உரை செய்து வெளியிட்டிருக்கிறார்கள்.

இந்த உரைகளைத் தொடுவதற்குக் கூட 'தூயோமாய் வந்து' என்கிற தகுதி வேண்டும் என்றே உலகத்து உயிர்களின் உன்னத வாழ்வில் நாட்டம் கொண்ட நம் ஞானாசிரியர்கள் வரையறுத்து வைத்திருக்கிறார்கள்.

வைணவ உரைவளம் என்கிற நூலை செய்வதற்கு முன் வடமொழியையும், வேளுக்குடி வரதாச்சாரியரிடம் வைணவமரபு வழிக் கருத்துக்களையும் கேட்ட தமிழறிஞர் தெ.ஞானசுந்தரம் ஒரு முறை திருவரங்கத்தில் பேசும்போது, ஆசார்யர்கள் நின்று ஞானமொழி பேசிய இம்மண்ணில் நின்று பேசவே என் கால்கள் நடுங்குகின்றன என்று சிலிர்த்தார். (கருத்து உதவி: ஸ்ரீ ஏ.வி.ஆர்).

வைணவ இலக்கியங்களில் தோய்ந்ததால் வந்த வெள்ளிய மனத்தின் வெளிப்பாடு அது.

அப்படி முறையான பயிற்சி பெற்று, திருப்பாவையைத் தொட்டிருந்தால் வைரமுத்துவுக்கு இந்த அவலநிலை வாய்த்திருக்காது.

ஆழ்வார்களின் நோக்கம், இலக்கண இலக்கியப் புலமையை மட்டும் வெளிப்படுத்துவது அல்ல.

தான் வணங்கும் - நம்பும் - திருமாலைப் பாடுவதற்கும் பரப்புவதற்கும் தமிழ்தான் ஏற்ற மொழி என்பதால் தமிழில் பாடினார்கள்.

இதைப்புரிந்து கொண்டிருந்தால் தமிழை மட்டும் சமய இலக்கியங்களிலிருந்து பிரித்து எடுத்து நேசிப்பதாகத் தருக்கித்திரியும் வைரமுத்து, ஆண்டாள் பக்கமே வந்திருக்க மாட்டார்.

'கொடுமையில் கடுவிசை அரக்கன் திருவினைப் பிரித்து' என்பது ஆழ்வார் பாசுரம். அதுபோல் ஆன்மீகத்தை தமிழிலிருந்து பிரிக்கிறார் வைரமுத்து.

ஆண்டாள் நம்பிய திருமாலை நம்பாத நாத்திக வைரமுத்து திருப்பாவையில் வேறு என்னத்தைத் தேடுகிறார் ?

வைரமுத்துவின் கட்டுரைகளை உற்றுப்பார்ப்பவர்க்கு ஒன்று பளிச்செனப்படும்.

நூலாசிரியரின் கருத்தையோ - நூலுக்கு அதே அலை வரிசையில் எழுதிய உரையாசிரியர் கருத்தையோ புறம் தள்ளிவிட்டு, அதில் தன் கைச்சரக்கை கச்சிதமாக நுழைத்து விடுவார்.

ஏற்கனவே வந்த கம்பன், திருமூலர் கட்டுரைகளைப் படித்தவர்க்கும் இது தெரிந்திருக்கும். ஆனால், மௌன ஆசிரியர்களான தமிழறிஞர்கள் வாய்மூடிக் கிடந்தார்கள்.

வென்றவன் சொன்னதே வேதமாகியது.

திருப்பாவையில் மானுடக்காதலைத் தேடுகிறார் வைரமுத்து.

மானுடக் காதலையும், அதன் நுட்பத்தையும் வெளிப்படுத்த சங்க இலக்கியப் பாடல்கள் இருக்கின்றன. இன்றைக்கும் புதுக்கவிஞர்கள் இருக்கிறார்கள்.

இது அந்த வகை காதலல்ல என்பதால்தான் ஆணுக்கே நாயகிபாவம் ஏற்படுகிறது. இதற்கு ஆசார்ய ஹ்ருதயம் என்கிற உயர்ந்த நூல் ஞானத்தில் தன் பேச்சு பிரேமத்தில் பெண் பேச்சு என்று ஆணித்தரமான விளக்கத்தைத் தரும்.

ஆசார்ய ஹ்ருதயத்தை ஒரு முறை தொட்டுப் பார்த்திருந்தால் கூட வைரமுத்துவுக்கு இந்த தரம் கெட்ட கட்டுரையை எழுத மனம் வந்திருக்காது.

வைரமுத்து "அதிகாலை ஒழுக்கத்துக்குப் பாவை நோன்பு என்பது சடங்கு கண்ணன் என்பதொரு காரணம்" என்கிறார்.

அதிகாலைஒழுக்கம்என்கிறதொடரே சரியா என்று தெரியவில்லை. கண்ணன் என்பதொரு காரணம் அல்ல கண்ணன் மட்டுமே காரணம் என்பதுதான் திருப்பாவையின் மையப்பொருள்.

கண்ணனே கணவனாய் அமைய நோற்பது காத்யாயினி நோன்பு. நல்லதோர் கணவனை அடைய நோற்பது மட்டுமே திருப்பாவை நோன்பு என்று புது விளக்கம் தரும் வைரமுத்து இந்த விளக்கத்தை எங்கிருந்து பெற்றார் என்று சொல்லவில்லை.

உற்றோமே யாவோம்; உனக்கே நாம் ஆட்செய்வோம் மற்ற நம் காமங்கள் மாற்று என்கிற திருப்பாவைத் தொடர் வைரமுத்துவின் கண்ணில் விழவில்லையா ?

ஆண்டாளின் நோக்கமும் கண்ணனை அடைவது; ஆண்டாள் தன்னுடன் சேர்த்த பெண்களின் நோக்கமும் கண்ணனை அடைவதுதான்.

கணவனை அடையும் நோக்கம் திருப்பாவையில் எந்த வரியில் வருகிறது வைரமுத்து அவர்களே !

குத்துவிளக்கெரிய பாட்டுக்கு - தன் பாட்டுக்கு அர்த்தம் சொன்ன வைரமுத்து, கறவைகள் பின் சென்று பாசுரத்துக்கு என்ன அர்த்தத்தைச் சொல்வார் ?

மானுடக் காதலில் தனிமை முக்கியம். ஆன்மீகக் காதலில் குழு முக்கியம். திருப்பாவை குழுவினர் பாட்டு.

இறைவன் முன் எல்லோரும் சமம் என்னும் குறுகிய பரவசம் என்று கூறுகிறார் வைரமுத்து. இதில் என்ன செய்தியைக் கூற வருகிறார் ? ஆண்டாளின் தமிழுக்கும் இம்மாதிரியான இன்றைய அரசியல் கருத்துக்களுக்கும் என்ன தொடர்பு ?

தன் கருத்தை வலிந்து கொடுக்கும் முயற்சியில் வைரமுத்து தினமணி பத்திரிக்கையின் பத்திகளை வீணடித்திருக்கிறார்.

தெய்வம் - கடவுள் என்று இடையிடையே சாதாரண வாசகனுக்குப் புரிபடா வகையில் குழப்ப யுத்தங்கள் நிகழ்த்துவது எதற்காக ?
பெரியாழ்வார் பெற்ற பெண் அல்ல ஆண்டாள்; எல்லோருக்கும் தெரியும். கண்டெடுத்த பெண். இதுவும் எல்லோருக்கும் தெரியும்.

அப்புறம் என்ன கேள்வி ? ஆண்டாள் யார் பெற்ற பெண் என்று ?

இந்த ஆய்வுக்கும் தமிழின் மாண்புக்கும் என்ன தொடர்பு ?

பூமாதேவியின் அம்சம் என்று வைணவர்கள் நம்புகிறார்கள். இதில் வைரமுத்துவுக்கு எங்கே குறை வந்தது ? வைணவர்களின் நம்பிக்கையை கேள்வி கேட்கிறாரா ? கேலி செய்கிறாரா ?

"ஆண்டாளின் தமிழைப் போற்றுகிறேன் என்று கிட்டத்தட்ட 2500 வார்த்தைகளுக்கு மேற்பட்ட கட்டுரையில் ஒரு 20 வார்த்தையாவது ஆண்டாள் தமிழின் சிறப்பைப் போற்றியிருப்பாரா ?"

"தன் உடலென்ற அழகும் உயிர் என்ற பொருளும்" என்று எழுதுவது சரியான உவமைதானா ?

"ஆழ்வார் பாசுரங்களோ அடிமையுறுவதில் ஆனந்தம் காண்பன. ஆண்டாள் பாசுரங்களோ விடுதலைக் குரலின் வீச்சுடையன" என்கிறார்.

காற்றில் கத்தி வீசுவதைப் போல இப்படி ஒரு கருத்தை தன் ஆராய்ச்சி பீறிட முழங்குகிறார்.

ஜீவாத்மாவை அடிமையாகவும், பரமாத்மாவை ஆண்டாளாகவும் கொள்ளும் மரபு வைணவ தத்துவ மரபு.

ஆழ்வார்களின் அடிமைக் குரலான பாசுரங்களை ஆண்டாள் பாசுரங்களிலும், ஆண்டாளின் விடுதலைக் குரலான பாசுரங்களை ஆழ்வார்கள் பாசுரங்களிலும் காணலாம். நாலாயிரம் பாடல்களிலும் நுட்பமான பயிற்சி இருந்தால் மட்டுமே இதை நுகர்ந்து உணர முடியும்.

வைணவ இலக்கியங்களிலே - அதன் தத்துவப் பின்புலத்தோடு - தோய்ந்து கரைகண்ட அறிஞர்களிடம் பாடம் கேட்டிருந்தால் மட்டுமே இது சாத்தியம்.

இல்லையெனில் குருட்டுக்கிழவன் கிணற்றில் விழுந்த கதைபோலத்தான் முடியும் !

"குத்து விளக்கெரியப் பாசுரம்" ஆண்டாள் அகவெழுச்சியின் அத்து மீறல் என்று எழுதி, "இதற்கு உரைகாரர்கள் வேறு பொருள் காட்டித் தம் தீராத் திமிர் காட்டுவார்கள் என்று எழுதும் வைரமுத்துவின் வாசகங்களில்; அவரின் அறிவுணர்ச்சியையும், ஆய்வுணர்ச்சியையும் விட, பிரபல்யமாகி பெரும் மேடை கிடைத்துவிட்டால் எதையும் சொல்லலாம் என்ற திமிர் உணர்ச்சி தானே வெளிப்படுகிறது !

நுண்மான் நுழைபுலம் மிக்க உரைகாரர்கள் பக்தியைத் தவிர, வேறறியாதவர்கள் - குற்றமற்ற தூயவர்கள் - யார் வம்புக்கும்

போகாமல் தெய்வத் திருவடிகளையே நம்பிக் கிடந்தவர்கள். பரம கருணையுள்ளவர்கள் உரைகாரர்கள். இத்தகைய உரைகாரர்களின் ஒரே ஒரு சொல் ஆழத்துக்குக் கூட நெருங்க முடியாதவர் வைரமுத்து! திருப்பாவைக்கு ஏராளமான அறிஞர்கள் எழுதிய அற்புத உரையை; ஞான உரையை - உள்ளுறைப் பொருளை உலகுக்கு காட்டும் உரையை; புலமைத்திமிர் என்று ஒதுக்கிவிட்டு இழித்துரைப்பதுதான் ஆண்டாள் தமிழுக்கு வைரமுத்துவும் தினமணியும் தரும் ஏற்றமா ? மனசாட்சியோடு தமிழுலகம் முன் அவரும் தினமணியும் பதில் சொல்ல வேண்டும்.

உலகியல் காமத்தின் உன்னத வரிகளே குத்துவிளக்கு பாட்டின் நேர்பொருள் - உயர்பொருள் என்று தீர்ப்பளிக்க வைரமுத்து யார் ?

இன்றைக்கும் திருப்பாவை, மார்கழி விடியலில் வைரமுத்து வீட்டின் பள்ளியறையிலா பாடப்படுகிறது ?

தனித்த பாலியல் உணர்வுப் பாசுரமாக இவர் சொல்லும் பாசுரங்களை ஊரறிய - கனத்த குரலோடு - தெருவில் நின்று பாட வேண்டிய மரபை யார் ஏற்படுத்தித் தந்தது ?

இதுதான் அந்தப் பாடலின் அர்த்தம் என்றால், நாதமுனிகள் போன்றோர் அதை தினம்பாட வேண்டிய முறையில் (சாற்றுப் பாசுரங்கள்) சேர்க்க வேண்டிய அவசியம் என்ன ?

தன் உள்ளக் கருத்தை ஓங்கித் திணிக்க - உரைகாரர்களை சர்வ அலட்சியமாக தூக்கிப் போடுவதின் உள்நோக்கம் திருப்பாவையையும் - திருப்பாவையின் உன்னதத் தமிழையும் உயர்த்துவதா ?

"கண்ணனோடு உறவாடியதை உயர்திணைப் பெண்கள் சொல்லார்" என்றால் வைரமுத்துவின் மனதில் இருக்கும் இழிபொருள் என்ன ?

கண்ணன் உயர்திணைப் பெண்களோடு மட்டும் கூடுபவனா ? பின் ஏன் ஆயர் குலத்தில் பிறந்தான் ? இது அபத்தத்தின் உச்சமல்லவா ? தினமணி இதனை ஆராய்ச்சி என்று வெளியிடுகிறது.

குலசேகர ஆழ்வாரின் குரலில் ஒரு பக்தனின் முக்தி வேட்கை மட்டுமே முன்னுரிமை பெறுகிறது என்கிறார்.

ஐயா வைரமுத்து அவர்களே! குலசேகர ஆழ்வாரை முழுதும் படித்திருக்கிறீரா ? அவருடைய ஏர்மலர் பூங்குழல் பாசுரத்தை ஒருமுறை படித்துப்பாரும்! தேவகியின் புலம்பலும், தசரதன் புலம்பலும் படித்துப்

பார்த்தால் நீங்கள் எழுதின வார்த்தைகளை நீங்களே மறுக்கும் ஞானம் பிறக்கும்.

அன்பே தகளியா பாட்டில் தொண்டுள்ளத்தின் உருக்கமே தூக்கலாய்த் தெரிகிறது என்று எழுதுகிறார் வைரமுத்து.

தனிமனிதனின் தொண்டுள்ளம் அல்ல; உலக உயிர்களை உன்னதத் தன்மையோடு நேசிக்கும் மனித மாண்பின் வெளிப்பாடுதான் முதலாழ்வார்களின் குரல்.

நம்மாழ்வாரின் நாயகி பாவத்தில் உண்மையைத் தாண்டி உணர்ச்சி வினைப்படவில்லை என்று அருகிருந்து நம்மாழ்வாரை உணர்ந்தது போல் சொல்கிறார் வைரமுத்து.

திடீரென்று வைணவத்துக்கு மாறியவர் திருநீறு குழைத்து திருமண் இட்டுக் கொண்டது போல உணர்ச்சியின் பிரவாகம் யாப்புக்குள் தடுக்கி விழுகிறது! என்று எழுதுகிறாரே! இந்த விஷமத்தனமான உதாரணம் எதற்கு ?

வைரமுத்துவைவிட 1000 மடங்கு பரம ரசிகர் பராசரபட்டர். இவர் நம்மாழ்வாரின் அகத்துறை பாடல்களுக்கு கொடுத்த விளக்கத்தை சற்று வாசித்து விட்டு பிறகு வந்து விளக்கமளிக்கலாம் வைரமுத்து.

இப்படி வரிக்கு வரி அபத்தப்பின்னலை அலங்காரத் தமிழில் செருகி, அச்சேற்றி, புரிந்தவர்களை கலங்க வைக்கவும், புரியாதவர்களை மயங்க வைக்கவும், புதியபார்வை என்று சொல்லி, தன் கருத்தை வலிந்து திணிக்கவும் வைரமுத்துவால் மட்டுமே முடியும்.

இப்படி உள்ள அபத்தங்களின் உச்சம்தான் இண்டியானா பல்கலைக்கழகத்தின் ஆராய்ச்சி என்று உள்நோக்கத்தோடு சேர்க்கப்பட்ட ஆங்கில வரி!

தமிழில் ஆராய்ந்தவர்களையெல்லாம் உதறித் தள்ளி விட்டு, தமிழை உயர்த்த ஆங்கிலத்தைத் தேடிப்போய் தன் அறிவுக்கூர்மையை நிரூபிக்க முயற்சித்திருக்கிறார் வைரமுத்து.

கடைசியில் முடிக்கும்போது எட்டாதன எட்டுவதற்கும் கிட்டாதன கிட்டுவதற்கும், மனித குலத்தின் முதல் மூலதனம் நம்பிக்கை மீது கொள்ளும் நம்பிக்கை என்று முடிக்கிறார்.

நம்பிக்கை வேறு; நம்பிக்கை மீது கொள்ளும் நம்பிக்கை வேறு போலிருக்கிறது!

வைரமுத்து அவர்களே! தமிழை காசுக்கு ஆராய்வதும் நேரத்தைப் போக்க ஆராய்வதும் உங்கள் தொழில்.

அதற்கு உங்கள் இலக்கியத்தையே நீங்கள் ஆராய்ந்து உரை எழுதலாம். மகிழலாம். உச்சி குளிரலாம்.

ஆனால், ஆண்டாள் தமிழ்க்கவிஞர் மட்டுமல்ல,

தெய்வக் கவிஞர். நூற்றுக்கணக்கான திருத்தலங்களிலே தனிக்கோயில் நாச்சியாராக பகவானுக்கு இடப்புறம் வீற்றிருந்து அருள் தருபவர்.

ஆண்டாளின் திருப்பாவையை தமிழுக்காக மட்டுமே நீங்கள் கருதலாம். ஆனால், அதனை நீங்கள் தினசரி வாசிப்பதில்லை. உங்கள் உணர்வோடு கலந்ததல்ல அது.

ஆனால், வைணவர்கள் அதனை தங்கள் வாழ்வியலோடு பிணைத்துக் கொண்டவர்கள்.

திருப்பாவையைச் சேவித்து - ஆண்டாளை வணங்காமல் அவர்கள் தினசரி காலை உணவை உட்கொள்வதில்லை.

அந்தத் தெய்வத்தமிழை உங்கள் எல்லைக்குட்பட்ட அறிவால் (limited knowledge) கொச்சைப்படுத்தாதீர்கள்.

ஆண்டாளோடு உங்கள் தமிழ் ஆராய்ச்சியை விட்டு விடுங்கள்.

உங்கள் பணமும் புகழும் செல்வாக்கும் உங்களைக் காப்பாற்றட்டும்.

[ நன்றி: ஆலய தரிசனம், ஜனவரி 2018 இதழ் ]

## 2. ஆண்டாளைப் பற்றிய வைரமுத்துவின் தினமணிக் கட்டுரை குறித்த கருத்துக்களை மேற்கண்ட தலையங்கமாக எழுதியிருந்தோம். அதனை ஒட்டியும் அதன்பிறகு நடைபெற்ற சில நிகழ்வுகளைக் குறித்தும் வாசகர்கள் நம்மிடம் விளக்கம் கேட்டுக் கொண்டேயிருக்கின்றனர். வாசகர்களின் தெளிவுக்காக இந்த விவாதம் தொடர்கிறது. – ஆலய தரிசனம்

**கேள்வி:** வைரமுத்து ஆண்டாளைப் பற்றிய சர்ச்சைக் குரிய கருத்துக்களை வெளியிட்டதாகக் கருதுகிறீர்கள். அதன் பிறகு வருத்தம் தெரிவித்த வைரமுத்துவைப் பற்றிய எதிர்ப்பு ஓயாமல் இருக்கிறதே ?

**பதில்:** வைரமுத்து ஆண்டாளைப் பற்றிய சர்ச்சைக்குரிய கருத்துக்களை வெளியிட்டுவிட்டு, அதன் எதிர்வினைகளைக் குறித்துச் சொல்லும்போது போராட்டங்கள் தூண்டிவிடப்பட்டன என்கிறார். வைரமுத்து ஆண்டாளைப் பற்றிய கட்டுரை வெளியிடும் முன்னே அடியேன் நண்பர்களிடம் பேசும்போது சொன்னேன். வைரமுத்து ஆண்டாளைப் பற்றிய கட்டுரை பேசப் போகிறார். அது கட்டுரையாக இருக்காது, கட்டு உரைத்ததாகவே இருக்கும் என்றேன்.

**கேள்வி:** எதனால் அப்படி ஒரு முடிவுக்கு வரவேண்டும் ?

**பதில்:**இதற்கு முன்னால் கம்பர் உவே.சா. திருமூலர் பற்றி எழுதிய கட்டுரைகளை உற்றுப் பாருங்கள். வைரமுத்துவின் புலமைக் காய்ச்சலும், தன் முனைப்பும், தன்னுடைய கருத்துக்கு ஏற்ப கட்டுரையை வளைக்கும் சாமர்த்தியமும் தெரியும்.

**கேள்வி:** வைரமுத்து இது குறித்து விளக்கம் சொல்லும் போது கட்டுரையை வாசிக்கும்போது எந்த எதிர்ப்பும் இல்லை. அக்கட்டுரையை ஏற்கும் ஆரவாரமே இருந்தது. நான் மேடையிலேயிருந்து என் கார் வரை செல்வதற்கே 40 நிமிடங்கள் ஆகியது என்கிறாரே வைரமுத்து.

**பதில்:** இக்கருத்தில் கூட வைரமுத்துவின் தற்பெருமை தானே தெரிகிறது. வைரமுத்துவின் ஆதரவாளர்கள் அக்கூட்டத்தில் அதிகம். அவருடைய அலங்காரச் சொல்லாடலில் மயங்கியவர்கள் நுட்பமாக வலிந்து ஏற்றிய கருத்தைச் சுதாகரிக்கும் அவகாசம் அன்று கிடையாது.

அர்ஜூன்சம்பத் சொல்வது போல, சபை நாகரிகம் கருதி பலர் விட்டிருக்கலாம். இதில் இன்னொரு விஷயம், அப்பேச்சு தினமணியில் அச்சேறாமல் போயிருந்தால்கூட, பேசிய பேச்சு காற்றோடு போயிருக்கும். வரிக்கு வரி, அதை தினமணி அப்படியே வெளியிட்டதால் தான் இத்தனை பரபரப்பு. நிதானமாகப் படிக்கும்போதுதானே வைரமுத்துவின் அத்துமீறல் தெரிகிறது.

**கேள்வி:** வைரமுத்து இந்த எதிர்வினையை எதிர்பார்த்திருப்பாரா ?

**பதில்:** கட்டாயம் எதிர்பார்த்திருப்பார். இதுவரை அவர் வீசிய வெடிகள் வெடிக்காமல் போகவே, இப்போது சர்ச்சையைத் தூண்டக்கூடிய கருத்தை வெளியிட்டிருக்கிறார்.

**கேள்வி:** ஓர் ஆராய்ச்சிக் கட்டுரையைத் தானே மேற்கோள் காட்டி வெளியிட்டிருக்கிறார் ?

பதில்: முதலில் அந்த ஆராய்ச்சிக் கட்டுரை அமெரிக்கப் பல்கலைக்கழகம் வெளியிடவில்லை. (அமெரிக்கா என்ற வார்த்தையில் அத்தனை நம்பிக்கை நம்மவர்க்கு). இரண்டாவதாக மேற்கோள் காட்டப்பட்ட அக்கட்டுரையின் ஆசிரியர்கள் (நாராயணன் கேசவன் கேரள பல்கலைக்கழக சரித்திரத்துறை) தாங்கள் சொன்ன வார்த்தைக்கு ஆதாரம் இல்லை. ஊகம் என்று சொல்லி விட்டார்கள். அவர்களைக் கண்டிக்காமல் என்னை ஏன் எதிர்க்கிறீர்கள் என்கிறார் வைரமுத்து. வைரமுத்து சொன்ன பிறகு தான் இப்படி ஓர் கருத்து இருப்பதே தெரிகிறது*.

><><><><><><><><><><><><><><><><

*இந்த சர்ச்சையின் உண்மையை அறியும் நோக்கத்துடன் 'தந்தி டிவி' ஆராய்ந்து வெளியிட்ட செய்திக் குறிப்பின்படி, இந்தியானா பல்கலைக்கழகத்துக்கும் வைரமுத்து குறிப்பிட்ட புத்தகத்திற்கும் எந்த சம்பந்தமும் இல்லை என்று தெரிகிறது, அது சிம்லாவில் வெளியிடப்பட்டது, கேரளக்காரர்கள் இருவரும்1923ல் T.A கோபிநாத ராவ் என்பவர் வெளியிட்ட "ஸ்ரீ வைஷ்ணவர்களின் வரலாறு" என்கிற புத்தகத்தில் 5ஆவது பக்கத்தில் "பெரியாழ்வார் கனவில் தோன்றிய ரங்கனாதன், ஆண்டாளை 'தன் வீட்டிற்கு' அழைத்து வரச் சொன்னார் என்று எழுதியிருந்ததைக் கொண்டு யூகத்தின் பேரில் ஆண்டாளை தேவதாசி என்று தாங்கள் எழுதியதாக சொல்லிவிட்டார்கள். கேரளத்தார் இருவரும் ரங்கனதனை ஏதோ ஸ்ரீரங்கம் ஜமீன்தார் என்று நினைத்துவிட்டார்கள் போலிருக்கிறது, கோபிநாத் ராவுக்கும் 'வீடு' என்று குறிப்பிடும் போது என்ன சொல்கிறோம் என்று எட்டவில்லை. இப்படி இப்பொருளை யார் யார் வாய் வழியாகவோ கேட்ட வைரமுத்துவுக்கும் இதன் மெய்ப்பொருளைக் காணும் அறிவு இல்லாமல் போய்விட்டது (மேலும் காண்க: https://www.youtube.com/watch?v=I5jEWY_fACw&feature=youtu.be மற்றும் https://twitter.com/Ramkaashyap/status/952772990348873728?s=08)

**கேள்வி:** இந்த சான்றிண்மையை மறுத்து விட்டால் போதுமே ........ ஆர்ப்பாட்டம் எதற்கு ?

**பதில்:** யாரோ முகம் பேர் தெரியாதவர்கள் கருத்தைச் சான்று காட்டுகிறார் வைரமுத்து. அதன் நூலாக்கியும் வெளியிடப்போகிறார். நாளை இதே கருத்தைச் சான்று காட்டி நிறைய கட்டுரைகள் வெளியிடப்படும். வைரமுத்துவின் நோக்கம் ஆண்டாளின் பிம்பத்தைச் சிதைப்பதுதான்..... நாளை வைரமுத்துவின் தினமணிக் கட்டுரையை ஆதாரம் காட்டி அதிகமான ஆய்வுக்கட்டுரைகள் வரும்.

**கேள்வி:** சரி......... இது வைரமுத்துவின் கருத்துச் சுதந்திரத்தினை மறுப்பதாக ஆகாதா ?

**பதில்:** எது கருத்துச் சுதந்திரம்? கையை வீசி நடப்பது கருத்துச் சுதந்திரம் அடுத்தவன் மூக்கை உடைப்பது எப்படிக் கருத்துச் சுதந்திரமாகும்? வைரமுத்து இன்றளவும் தன் கருத்து மற்றவர்களை காயப்படுத்தி விட்டதை உணராமல் இருப்பது அதிசயமாக இருக்கிறது.

**கேள்வி:** ராஜாஜி ஆண்டாள் கற்பனை என்று சொன்னதாக ?

**பதில்:** ராஜாஜி ஆண்டாளை அவதூறாகச் சித்தரிக்கவில்லை. ஆயினும் அவருக்கும் மறுப்பு தெரிவிக்கப்பட்டது. ராஜாஜிக்கு வைணவம் தெரியாது என்பதை அவரே ஏற்றுக் கொண்டிருக்கிறார். இதனை அவர் தனது தனிப்பட்ட கருத்தாகவே சொன்னதாகச் சொல்லி, பின்னால் வருத்தம் தெரிவித்து புத்தூர் கிருஷ்ண ஸ்வாமி அய்யங்காருக்கு கடிதம் எழுதியிருக்கிறார். இங்கே பிரச்சினை இதுதான். லட்சம் விற்கக் கூடிய பிரபல பத்திரிகைகளிலே தப்பு தப்பாக எழுதிவிட்டு, 1000, 2000 விற்கக்கூடிய பத்திரிகையிலே மறுப்பு தெரிவித்து கதையை முடித்து விடுகிறார்கள்.

**கேள்வி:** வினை எதிர்வினையைக் கடந்து இந்த விவகாரம் ஆக்கபூர்வமான விவாதமாக அறிஞர் பெருமக்களால் நடத்த முடியாததற்கு யார் காரணம் ?

பதில்: ஆக்க பூர்வமாக விமர்சிக்கும் அறிஞர்கள் குறைந்து விட்டதே காரணம். உணர்ச்சி பூர்வமாக உள்நோக்கங்களோடு வினை எதிர்வினை அதற்கொரு எதிர்வினை என்று போகிறதே தவிர, ஆக்கபூர்வமான விவாதம் நடைபெறவில்லை. ஆண்டாள் பற்றி வைரமுத்து என்ன எழுதினார் என்று அக்கட்டுரையைப் படிக்காமலேயே கருத்து சொல்கிறவர்கள் படித்தும் புரியாமல் கருத்து சொல்பவர்கள் எனப்பலரும் இடையில் புகுந்து விவாதத்தின் கூர்மையை மழுங்கச் செய்து விட்டார்கள்.

**கேள்வி:** தமிழறிஞர்கள் பலரும் ஏன் கண்டிக்கவில்லை ?

பதில்: தமிழறிஞர்களாகவும்இருக்கிறவைணவ அறிஞர்கள், சமயப்பற்று மிக்க தமிழறிஞர்கள் விவாதித்தார்கள். ஆனால், தொலைக்காட்சியில் கூட வைரமுத்துவை வைத்து விவாதம் நடந்ததே தவிர, அக்கட்டுரையின் கருத்துக்கள் பற்றிய விவாதங்கள் நடைபெறவில்லை. கருத்தியல் ரீதியாகக் கொண்டு போகாமல் அரசியல் ஆதாய ரீதியாகக் கொண்டு போனார்கள். அறிஞர்கள் விவாதிக்கத் தயங்கியதால் அரசியல் விமர்சகர்கள் ஆண்டாளைக்குறித்து விவாதித்தார்கள்.

**கேள்வி:** ஏன் ?

**பதில்:** அறிஞர்களை வைத்து விவாதித்தால் விஷயம் நல்லபடியாக சுமுகமாக முடிந்து விடும். வீரமாக ஒருவரை ஒருவர் தூண்டுவிடும்படி விவாதித்தால் சுவாரசியமாக இருக்கும். அதுதான் ஊடகங்களுக்கு வேண்டும்.

**கேள்வி:** தமிழறிஞர்கள் ஏன் விவாதிக்கவில்லை என்பதற்கு வேறு காரணங்கள் உண்டா ?

**பதில்:** வைணவத்தமிழை அதன் உட்கருத்தை புரிந்து கொள்ள உரைப்பயிற்சியும் வைணவ தத்துவ அறிவும் தேவை. அடுத்து சமயப்பற்று இன்றி தமிழ்ப்பற்று மட்டும் உள்ளவர்கள் இருக்கிறார்கள். எனவே அவர்கள் ஒரு நிலைக்குமேல் வரவில்லை.

ஆனால் திரு சுகிசிவம் வைரமுத்துவின் கட்டுரையை இத்தனை அத்துமீறலா என்று தர்க்க ரீதியாக அலசினார். மற்ற சில வைணவ அறிஞர்கள் விளக்கமளித்தாலும், அவற்றை ஊடகங்களோ மற்ற அறிஞர்களோ கண்டு கொள்ளவில்லை.

**கேள்வி:** இது தவிர

**பதில்:** உள் அரசியல் இப்பிரச்சினையில் நிறைய உள்ளது. நினைத்தால் தலையைச் சுற்றும்.

**கேள்வி:** சரி. இப்பிரச்சினையை இப்படிப் பார்ப்போம். வைரமுத்து கடவுள் நம்பிக்கை இல்லாதவர். அவர் ஆண்டாள் தமிழில் இருந்த சமய விஷயங்களைத் தள்ளி விட்டு, தான் ஏற்றுக் கொண்ட தமிழை மட்டும் பாராட்டுவதில் என்ன தவறு ?

**பதில்:** அப்படிச் செய்திருந்தால் ஒரு தவறும் இல்லை. திருப்பாவையிலும், நாச்சியார் திருமொழியிலும் மேகவிடுதூது, பனி விடியலின் அழகு என அருமையான செய்திகள் கொட்டிக் கிடக்கின்றன.

ஆனால், அதை விட்டு விட்டு, ஆண்டாளின் பிறப்பு ஆராய்ச்சியில் அல்லவா இறங்கி விட்டார்.

**கேள்வி:** ஆண்டாளை விமர்சிக்க அவருக்கு உரிமையில்லையா ?

**பதில்:** ஆண்டாள் தமிழ்க்கவிஞர் மட்டுமல்ல. தெய்வம். வைணவ ஆலயங்களில் தனிச்சந்நிதி உண்டு. ஆண்டாளைப் பற்றிய நம்பிக்கை அவர்களுக்கு உண்டு. வைரமுத்துவே சொல்கிறார். இக்கருத்தை பக்தர்கள் ஏற்க மாட்டார்கள் என்று! தெய்வ நம்பிக்கையில்லாத அவர் - தெய்வத்தை நம்பும் மக்களின் கூட்டத்தில் - அந்த நம்பிக்கையாளர்கள் ஏற்காத கருத்தை ஓர் தவறான மேற்கோள் என்று தெரிந்தும் அதனைச் சரிபார்க்காமல் வெளியிடுவதன் நோக்கம்? ஆண்டாளின் தமிழைப் போற்றுவதா என்ன ?

**கேள்வி:** எப்படியாயினும் அது கருத்துச் சுதந்திரம்தானே___

**பதில்:** கருத்துச் சுதந்திரம்தான். வைரமுத்து பிரபலமானவர். ஆயிரக்கணக்கான நபர்களைக் கூட்டி ஒரு கருத்து பதிவு செய்கிறார். லட்சக்கணக்கான பேர் படிக்கும் இதழில் வரிவிடாமல் அது அச்சேற்றப்படுகிறது. இப்போது அதனை மறுக்கும் கருத்துச் சுதந்திரம் எனக்குத் தரப்பட்டிருக்கிறது அல்லவா? அதை நான் எங்கே செயல் படுத்த முடியும்? எதிர்கருத்து உரிய அளவில் சேரமுடியாதபோது, இருவரின் கருத்துச் சுதந்திரமும் சட்ட ரீதியாகச் சரியாக இருப்பதாகத் தெரியுமே தவிர, நியாய ரீதியாக சரியாக எப்படி இருக்கும் ?

எனவேதான் வைரமுத்து போன்ற பிரபலமானவர்கள் ஒவ்வொரு சொல்லையும் கருத்தையும் விளைவு தெரிந்து பயன்படுத்த வேண்டும். வைரமுத்துவின் ஆண்டாள் கட்டுரை சர்ச்சையை ஏற்படுத்தி பலரின் மனதைப் புண்படுத்தி நிம்மதியற்ற நிலையை தமிழகத்தில் உண்டாக்கியதைத் தவிர ஆண்டாளுக்கோ ஆண்டாளின் தமிழுக்கோ என்ன பெருமையைச் செய்து விட்டது? கேட்டால் புரிந்து கொள்ளாமல் பேசுவதாக வைரமுத்து சொல்கிறார்.

**கேள்வி:** அப்படியானால் இதற்கு முடிவு ?

**பதில்:** இப்போது அடியேன் சொல்வது கூட வைரமுத்துவின் கட்டுரையில் உள்ள முரண்பாடுகள், பொய் மேற்கோள்களுக்கான விளக்கமே தவிர, வைரமுத்துவை விமர்சிப்பது என் நோக்கமல்ல. வைரமுத்துவின் குறிப்பிட்ட கட்டுரையின் செய்தியை விமர்சிப்பதும் தெளிவுபடுத்துவதும்தான் என் நோக்கம். எனவே வைரமுத்து இக்கட்டுரைக்கு சரியான விளக்கம் அளிக்க வேண்டும். அல்லது தவறு என்று அக்கட்டுரையின் கருத்தைத் திரும்பப் பெற வேண்டும்.

**கேள்வி:** தாஸ்யை, தாசி, தாசன் என்பது வைணவத்தில் புழங்கும் சொல்தானே ! அதை வைரமுத்து பயன்படுத்தியதில் என்ன தவறு ?

**பதில்:** தமிழ் அருமையான மொழி. அதில் ஒரு வார்த்தைக்குக் கூட பல அர்த்தங்கள் கண்டுபிடிக்க முடியும்.

உதாரணமாக, கொன்று விட்டாய் என்றால் சாகடித்துவிட்டாய் என்று தான் பொருள்.

ஆனால், இச்சொல் எங்கே, எந்த உணர்வில் உச்சரிக்கப்படுகிறது என்பதைப் பொறுத்து பொருள் மாறும்.

அவன் வீட்டு விருந்துக்குப் போனேன். கொன்று விட்டான் என்றால் அருமையான விருந்து உபசரிப்பு செய்தான் என பொருள்.

அருமையாக ஒருவர் பாடுகிறார். எப்படி பாட்டு என்று கேட்டவுடன் "கொன்னுட்டே போ" என்றால் அபாரம் என்று அர்த்தம். வேறு மாதிரி சொன்னால் ஒழித்து விட்டாய் என்று அர்த்தம்.

இப்படியே வம்பு பண்ணினால் "அடித்தே கொன்று விடுவேன்" என்று தாயார் குழந்தையைச் சொன்னால் எச்சரித்தல் என்று அர்த்தம். அவளை அவன் அடித்துக் கொன்று விட்டான் என்றால் சாகடித்து விட்டான் என்று பொருள்.

இரண்டு வைணவர்கள் தாசர்களாகச் சொல்லிக் கொள்வது வேறு. கடைத்தெருவில் போய் தாசன், தாசி என சொன்னால் பொருள் வேறு !

வைரமுத்துவின் மொத்தக் கட்டுரையையும் நீங்கள் உற்று கவனமாகப் படித்துக் கொண்டே வந்தால் தவறான இந்த மேற்கோளைத் திணிப்பதற்காகவே அந்தக் கட்டுரையை வார்த்தை ஜாலங்களால் அழகு படுத்தியிருப்பது தெரியவரும்.

**கேள்வி:** வைரமுத்துவிற்கு எதிர்வினையாற்றிய ஒருவர் கடுமையாகப் பேசியிருக்கிறாரே !

**பதில்:** இன்றைய ஊடகங்களுக்கு நியாயத்தைவிட தீனி வேண்டும். யார் வாயிலிருந்து எதைப்பிடுங்கி விவகாரமாக்கலாம் என்று பார்க்கிறார்கள். இதற்குக் காரணம் ஊடகத்தின் முதலாளிகள். அவர்கள் எல்லோரையும் உசுப்பிவிட்டு வியாபாரம் நடத்துகிறார்கள். வைரமுத்து ஓர் கட்டுரையை பதிவுசெய்கிறார். அந்தக் கட்டுரையால் மனதளவில் பாதிக்கப்பட்ட வைணவர்கள் கண்டனம் தெரிவிக்கிறார்கள். கட்டுரை தவறு என்கிறார்கள். இடையில் ஒருவர் ஓர் கடுமையான கருத்தை வைரமுத்து மீது வைக்கிறார். இப்போது விவகாரம் அவருக்கும்

வைரமுத்துவிற்கிடையேயானதாக மாறிவிட்டதே தவிர, கருத்தியல் ரீதியாக வைரமுத்துவின் கட்டுரைக்கான மறுப்பு கிடைப்பதில்லை.

எளிமையாக முடிய வேண்டிய விவகாரம் இழுத்துக் கொண்டே போகிறது. வைரமுத்துவை குறித்து கடுமையான வார்த்தைகளால் காயப்படுத்தியதை நான் ஏற்கவில்லை. ஆனால் அதற்காக வைரமுத்து சொன்னது சரியாகிவிடுமா ? அது தனி. இது தனி.

கேள்வி: ஆனால், தமிழ் படைப்பாளிகள் ஓர் அறிக்கையில் ஆண்டாள் தமிழை உயர்த்துவதற்குத் தானே கட்டுரை முழுதும் எழுதியிருக்கிறார் என்றும், இதனை எதிர்ப்பது கருத்துச் சுதந்திரத்திற்குச் சவால் என்றும் சொல்கிறார்களே ?

**பதில்:** சுஜாதா என்று ஒரு புகழ்பெற்ற எழுத்தாளர் இருந்தார். அவர் ஒரு கதையை குமுதத்தில் தொடங்கினார். முதல் அத்தியாயத்தோடு அதற்கு மூடு விழா நடந்தது.

சுஜாதா ஒரு மாதம் பெங்களூரில் கட்டிலுக்குக் கீழே படுத்துக் கொண்டார். தமிழகத்தில் ஆட்சி இருந்தது. படைப்பாளிகள் இருந்தார்கள் குமுதம் பகிரங்க மன்னிப்புக் கோரியது. நிலை குலைந்து போன சுஜாதா மறுபடி எழுதுவதற்கே மாதங்கள் ஆயிற்று. அப்போது யாரும் இப்படிப் பொங்கவில்லை.

இப்போது உள்ள படைப்பாளிகள் கருத்துச் சுதந்திரத்திற்குக் கொடி பிடிப்பது பாராட்டுக்குரியது தான்.

ஆனால், ஆண்டாள் எழுதியது திருவெம்பாவை என்று கண்டனக்கடிதத்தில் எழுதியிருக்கிறார்கள். இதனை எல்லாப் பத்திரிகைகளும் திருத்தாமலேயே வெளியிட்டார்கள்.

ஆண்டாளின் படைப்பைப் பற்றிய அடிப்படையே தெரியாத இவர்கள் வைரமுத்துவின் கருத்துச் சுதந்திரத்திற்கு கொடிபிடிப்பது யார் வேண்டுமானாலும் எதை வேண்டுமானாலும் எழுதலாம் என்பதுதானே !

கருத்துச் சுதந்திரத்திற்கு எதுதான் எல்லை ?

எழுத்தாளர்களுக்குத் தங்கள் எழுத்து, பேச்சு பற்றிய எந்த பொறுப்பும் இல்லையா என்பதை விவாதிக்க வேண்டிய நேரம் தான் இது !

**கேள்வி:** வைரமுத்து ஒரு காண்ஒளி (வீடியோ) வெளியிட்டு என் வார்த்தையை திரித்து மதவாதிகள் சதி செய்கிறார்கள் என்கிறாரே !

**பதில்:** ஏன் இப்படித் தவறாக எழுதினாய் என்று கேட்டுவிட்டால் போதும். உடனே அவனுக்கு மதவாதி என்று முத்திரை குத்தி மூலையில் உட்கார

வைத்து விடுவார்கள். ஒரு குறிப்பிட்ட கருத்தைச் சொல்வதாலேயே அவருக்கு ஒரு முத்திரை குத்துவது இப்போது பழக்கமாகிவிட்டது.

**கேள்வி:** உங்களிடம் போய் தமிழ் வளர்க்க வந்தேனே என்கிறாரே !

**பதில்:** வைரமுத்து தமிழ்க்கவிஞர்களைப் பற்றியும், தமிழ் இலக்கியங்களைப் பற்றியும் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார் என்று தெரியவில்லை.

அவரை யாரும் தமிழை வளர்க்கச் சொல்லவில்லை.

வைரமுத்து வந்து தண்ணீர் ஊற்றி வளர்க்கும் அளவுக்கு தமிழ் வளர்ச்சி குறைந்து விடவில்லை.

நீங்கள் வளர்க்கும் தமிழில் இது இது தவறு என்று சொன்னால், உனக்குப்போய் தமிழ் சொல்ல வந்தேனே என்கிறார். இது ஒரு வாதமா என்ன ? வைரமுத்து வெறுப்புணர்ச்சியில் பேசுகிறார்.

**கேள்வி:** தமிழர்களைப்பார்த்து நீ ஞானமுள்ளவன் புரிந்து கொள்வாய் என்கிறாரே !

**பதில்:** இதிலும் முரண்பாடு. ஞானமுள்ளவனிடம்போய் எதற்குத் தமிழை வளர்க்க வேண்டும் ?

ஆனால், "நீ ஞானமுள்ளவன்" என்று சொல்வதை அடியேன் இப்படிப் புரிந்து கொள்கிறேன்.

வைரமுத்து ஞானமுள்ளவன், புரிந்து கொள்வாய் என்று சரியாகவே சொல்லியிருப்பதாகக் கருதுகிறேன்.

எப்படி என்கிறீர்களா ?

வைரமுத்து எழுதியதில் உள்ள தவறுகளைச் சுட்டிக்காட்ட ஞானமுள்ளவர்களாலும், புரிந்து கொள்பவர்களாலும் தானே முடியும் !

(நன்றி: ஆலய தரிசனம், பிப்ரவரி 2018 இதழ்)

><><><><><><><><><><><><><><><

# 3. வைரமுத்துவும், முடித்து வைக்கப்பட வேண்டிய ஆண்டாள் ஆராய்ச்சியும்.

Jayasree Saranathan- http://jayasreesaranathan.blogspot.com/2018/01/blog-post.html

Wednesday, January 24, 2018

"ஆண்டாளின் புகழ் பாட ஆசைப்பட்ட" வைரமுத்து அவர்கள் "மூன்று மாதங்கள் ஆண்டாளை நான் ஆராய்ச்சி செய்து ஆய்வுக் கட்டுரைகளைத் திரட்டியது பிழையா?" என்று கேட்டுள்ளார். ஆராய்ச்சியே செய்யத் தெரியாமல் இவர் ஆராய்ந்ததுதான் பிழை. ஆராய்ந்தேன் என்கிறாரே இவர் எதை ஆராய்ந்தார்? ஆண்டாளின் தமிழையா, அல்லது ஆண்டாள் வரலாற்றையா? இரண்டையுமே என்றால், ஆராய்ச்சிக்கான வழி முறையின்படி இவர் ஆராய்ந்தாரா?

**எது ஆராய்ச்சி?**

தமிழாராய்ச்சி என்றால் அதற்கு இலக்கணம் வகுத்தாற்போல் ஆராய்ந்தவர் டாக்டர் உ.வே.சா. அவர்களே. அவர் எழுதிய எந்தப் புத்தகத்திலும் நூலாராய்ச்சி இடம் பெற்றிருக்கும். ஒரு நூலென்று எடுத்துக் கொண்டால் அதில் இடம் பெற்றுள்ள எல்லாவிதமான சொற்கள், கருத்துக்கள் ஆகியவற்றைத் திரட்டி, அவற்றுக்கு ஒப்புமையாக பிற நூல்களில் சொல்லப்பட்டுள்ளவற்றையும் திரட்டி ஒப்பு நோக்குவார். அவற்றைப் பற்றி முற்கால உரையாசிரியர்கள் சொன்னவற்றையும், அந்த நூல் எழுதப்பட்ட சம கால மற்றும் சங்க கால நூல்களையும் கொண்டு ஆராய்வார். அதன் மூலம் தெரிய வரும் வரலாற்றுச் செய்திகளையும், நூலில் இடம்பெற்றுள்ள செய்திகளது வரலாற்றுத் தன்மையையும் எடுத்துக் காட்டுவார்.

உதாரணத்திற்கு வைரமுத்து, சங்க காலப் பெண் புலவர் வெள்ளி வீதியாரை ஆண்டாளுடன் ஒப்பிடுகிறார். வெள்ளி வீதியார் அவர்களைப் பற்றி குறுந்தொகையில் உ.வே.சா. அவர்கள் அருமையாக ஆய்ந்துள்ளார். ஆனால் வைரமுத்து சொன்னது என்ன? சங்கப்பெண்பால் புலவர் வெள்ளி வீதியார் எழுதிய அகப்பொருள் பாடல்கள் மரபு மீறல் என்று சொல்லிவிட்டு, அதே சங்கத் தமிழில் முல்லைத் திணையையும், அகப்பொருளையும் பாடிய ஆண்டாளுக்கு மட்டும், சங்க இலக்கியத்தில் பெண்களுக்கு இல்லாத

விடுதலையும், துணிச்சலும், சுதந்திரமும் வாய்த்தது எப்படி என்று ஆய்வுலகம் ஆச்சரியப்படுகிறது என்கிறார்.

சங்கத்தமிழில் அகம் பாடுவது மரபு மீறலா? அதற்குத் துணிச்சலும், சுதந்திரமும் வேண்டுமா? வெள்ளி வீதியார் பாடியது மரபு மீறல் என்றால் அவருக்கும், அவரது பாடல்களுக்கும் சங்கப்பலகையில் அங்கீகாரம் கிடைத்தது எப்படி? அதே தமிழில் அதே அகப்பொருளைப் பாடிய ஆண்டாளுக்கு,ஆழ்வார்களுக்கிடையே இடம் கிடைத்தது எப்படி? அவள் பாடியவை வேதமனைத்துக்கும் வித்து என்ற அங்கீகாரம் கிடைக்கப்பெற்றது எப்படி? இவற்றை மட்டுமாவது வைரமுத்து ஆராய்ந்திருந்தால், இவர் பிழை என்று சொல்லும் மாபாதகத்தைச் செய்திருக்க மாட்டார். ஆண்டாள் அருளிய சங்கத் தமிழ்ப் பாடல்களை, சங்க காலப் பாடல்களோடும், சங்க இலக்கணத்துடனும் ஒப்பீடு செய்திருப்பாரே தவிர, இன்றைய கால சமூகக் கேள்வியாகப் பார்த்திருக்க மாட்டார்.

அவர் சங்க காலப் பாடல்களுடன் ஒப்பீடும் செய்யவில்லை, ஒப்புடைய சங்கத் தமிழ்ப் பாடல்களையும் அவர் அறிந்திருக்கவில்லை என்பதற்கு முழு முதல் உதாரணம், சர்ச்சைக்கிடமான அவரது பேச்சின் ஆரம்பத்திலேயே இருக்கிறது. பேச்சின் தொடக்கத்தில் ஆண்டாள் பாவை நோன்பு நோற்றதன் காரணமாக"திங்கள் மும்மாரி" பெய்ய வேண்டும் என்று அவள் கேட்பதைக் குறிப்பிட்டு, அது எப்பேர்ப்பட்ட பொதுநலப் பண்பு என்று சிலாகிக்கிறார் வைரமுத்து. ஆண்டாள் சொன்னது பொதுநலப் பண்பு என்றால், வருடந்தோறும் பாவை நோன்பைச் செய்து வந்த ஒட்டு மொத்த சங்ககாலத் தமிழர்களது பொதுநலப் பண்பை இவர் எப்படி மறந்தார்? அந்தப் பழைய மரபின் தொடர்ச்சியாகத்தானே ஆண்டாள் பாடியுள்ளாள்? சங்க இலக்கியமான பரிபாடலில் **(11-ஆம் பாடல்)**,காலத்தே மழை வருதலையும் காட்டி, தாய்மார்களும், கன்னியரும் பாவை நோன்பு நோற்றதில் இருக்கும் பொது நலத்தையும் காட்டிய பாங்கினை இவர் ஒப்பிட்டிருந்தால் அது ஆராய்ச்சி.

அப்படிப்பட்ட ஆராய்ச்சியை வைரமுத்து செய்திருந்தால், பரிபாடலில் சொல்லப்பட்டிருக்கும் காமம் சாலா இளங்கன்னியர் செய்த பாவை நோன்பையும், தைந்நீராடலையும்தான், சங்க காலம் இல்லாத காலக்கட்டத்திலும், ஆண்டாள் செய்திருக்கிறாள் என்பது புலனாகியிருக்கும். அப்பொழுதுதான் அவள் பாடியதை மரபு மீறல் என்றோ, சமூகக் கேள்வியாகவோ, பாலியல் கண்ணோட்டத்திலோ, பெண் விடுதலையாகவோ - இன்றைய குறைப்பார்வைக் கண்ணோட்டத்தில் பார்த்திருக்க மாட்டார்.

இது ஒரு புறம். இன்னொருபுறம், ஆண்டாளின் பிறப்பு குறித்த ஆராய்ச்சி செய்கிறார் வைரமுத்து. அந்த ஆராய்ச்சியை ஆண்டாள் பாசுரங்களிலும், பெரியாழ்வார் பாசுரங்களிலும் காணப்படும் உள்ளுறைச் சான்றுகளை ஒதுக்கி விட்டுச் செய்கிறார். ஆண்டாளே ஓரிடத்தில் கூறுகிறாள்,

“ ‘**தந்தையும் தாயும்** உற்றாரும் நிற்கத்

தனி வழி போயினள்’ என்னும் சொல்லு

வந்த பின்னைப் பழி காப்பரிது”

**(நாச்சியார் திருமொழி 12-3)**

அதனால் தமராகிய நீங்கள், என்னை இப்பொழுதே மதுரைக்கும், ஆய்ப்பாடிக்கும், துவராபதிக்கும் கொண்டு சேர்ப்பித்து விடுங்கள் என்கிறாள்.

தந்தையும், தாயும் மாலவனிடம் தன்னைக் கொண்டு சேர்ப்பிக்காமல், தானே தனியாகச் சென்றால் பழி வருமே என்று ஆண்டாள் சொல்வதைப் புறம் தள்ளி, அவள் பெரியாழ்வாருக்குப் பிறந்த பெண் இல்லை வைரமுத்து சொல்வதில் துளியேனும் ஆராய்ச்சியின் நிழலாவது இருக்கிறதா ?

வைரமுத்து செய்தது ஆராய்ச்சிதான்; குரு பரம்பரை ப்ரபாவத்தில் அவள் துளசி வனத்தில் பிறந்தாள் என்று சொல்லப்பட்டிருக்கிறதே என்று கேட்கலாம். அங்கேயே அவர் தன் ஆராய்ச்சியைச் செய்திருக்க வேண்டுமே என்பதுதான் இந்தக் கட்டுரையின் முக்கிய நோக்கம். **இனி வரும் காலத்தில் எவரும், ஆண்டாளின் பிறப்பை சந்தேகிக்கக் கூடாது** என்பதற்காகவே இனி வரும் விளக்கத்தை எழுதுகிறேன்.

**ஆண்டாள் பிறப்பு ஆராய்ச்சி.**

ஆழ்வார்கள் சரித்திரத்தை எழுதிய ஆச்சாரியர்களுடைய வாக்கில்தான் ஆண்டாள் துளசி வனத்தில் தோன்றினாள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதைக்கொண்டு ஆண்டாள் பெரியாழ்வாருக்குப் பிறக்கவில்லை என்று வைரமுத்து நினைத்தால், இப்படிப்பட்ட அதிசயமான பிறப்பு ஆண்டாளுக்கு மட்டும்தானா, அல்லது பிற ஆழ்வார்களும் இப்படித்தான் பிறந்தார்களா என்று தேடியிருக்கலாம் அல்லவா ? தேடவே வேண்டாம். குறிப்பாகப் படிப்பதை(selective reading) விடுத்து, குரு பரம்பரை சரித்திரத்தை முதலிலிருந்து படித்திருந்தால் முதலாழ்வார்கள் மூவர் சரித்திரத்திலும் இப்படிப்பட்ட இயற்கைக்குப் புறம்பான பிறப்புச் செய்தி

இருப்பது தெரிந்திருக்கும். அவற்றையும் படித்து ஆய்ந்திருந்தால் அது ஆராய்ச்சி.

'மூவாயிரப்படி குரு பரம்பரை ப்ரபாவம்' என்னதான் சொல்கிறது என்றால் பொய்கை ஆழ்வார் ஒரு குளத்தில் பிறந்தார்.

பூதத்தாழ்வார் மாதவிப் பூவில் அவதரித்தார்.

பேயாழ்வார் செவ்வல்லிப் பூவில் பிறந்தார்.

இவர்களெல்லாம் இப்படிப் பிறந்ததற்கு வைரமுத்து, மற்றும் வைரமுத்து பின்பற்றும் ஆராய்ச்சியாளர்கள் கொடுக்கும் விளக்கமென்ன ?

இவர்களது ஆய்வுக் கண்ணோட்டத்தில் இந்த ஆழ்வார்களும் தாய் - தந்தை யார் என்று தெரியாமல் பிறந்தவர்களா ? குலமறியாத இவர்களை யாரேனும் எடுத்து வளர்த்தார்களா ? அது எப்படி, பன்னிரண்டு ஆழ்வார்களில் நான்கு பேர்(ஆண்டாள் உட்பட) ஊர் பேர் தெரியாமல் விடப்பட்டு , தத்தெடுத்து வளர்க்கப்பட்டு, ஆனால் உலகம் காணாத அதிசயமாக பரஞானத்தை அடைந்து, உலகம் உய்யப் பாடிவிட்டுச் சென்றிருக்கிறார்கள் ? இதுதானே ஆராயப்பட வேண்டியது ?

ஆண்டாள் பெண் என்பதால், சாதிக் கட்டுப்பாடு, சமூகத்தின் பார்வை, குலமகளா இல்லையா என்று ஒரு வக்கிரத்தையும் விடாமல் வைரமுத்து பிடித்துக் கொண்டு விட்டார் - அதாவது மற்ற ஆராய்ச்சியாளர்கள் போர்வையில்.

முதலாழ்வார்கள் பிறப்பு விஷயத்தில் வைரமுத்து என்ன சொல்லப்போகிறார் ? அன்றைய தமிழ்ச் சமூகமே இழிந்து போயிருந்தது என்று சொல்லப்போகிறாரா ? இழி பிறப்பாக இருந்தால் அவர்களுக்கு அந்த ஞானம் எப்படி வந்தது ? அவர்களை ஆழ்வார்கள் - நம்மை ஆள்பவர்கள் என்று சமூகம் எப்படி ஏற்றுக் கொண்டது ? இதையெல்லாம் வைரமுத்து ஆராய்ந்திருந்தால் அது ஆராய்ச்சி.

இன்றைய விஞ்ஞான ஆராய்ச்சி என்ன சொல்கிறதென்றால், அவரவர் எண்ணத்தின் படியே சொல்லும், செயலும் அமையும். வைரமுத்துவின் எண்ணத்தில் என்ன இருக்கிறதோ, அதையொட்டிய கருத்துக்களையே அவர் கிரகித்துக் கொள்கிறார். அவற்றையே தன் எழுத்தில் பிரதிபலிக்கிறார். சிச்சுவேஷனுக்குப் பாட்டு எழுதுபவர்களுக்கு இன்றைய சிச்சுவேஷனில், தம்மைக் கவரும் கருத்துக்களை ஒட்டியே "ஆராய்ச்சியும்" அமையும். வைரமுத்துவின் மனோத் தத்துவத்தை ஆராய்பவர்கள் இந்த முடிவுக்குத்தான் வருவார்கள் !

வைரமுத்து செய்த ஆண்டாள் பிறப்பு ஆராய்ச்சியின் லட்சணத்தைப் பார்த்தோம். இனியும் எவரும் இப்படி ஆராயக் கூடாது என்றால், இந்தப் பிறப்புகளின் உள் அர்த்தத்தை நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஒருவர் பொய்கையில் பிறக்கிறார்; ஒருவர் மாதவிப் பூவில் பிறக்கிறார்; ஒருவர் செவ்வல்லிப் பூவில் பிறக்கிறார். ஒரு குழந்தை பொய்கையிலோ,பூவிலோ பிறந்திருக்க முடியாது. பிறந்தவுடன் அவற்றின் மீது விடப்பட்டும் இருக்க முடியாது. ஆனால் ஆச்சார்யர்கள் அப்படிச் சொல்லியிருக்கிறார்கள் என்றால் ஏதோ சூட்சுமம் இருக்க வேண்டும்.

அது என்னவென்று ஆராய்ந்தால், இவர்களை போன்றே பல்லவன் பிறப்பும் அமைந்திருக்கிறது என்று தெரிய வருகிறது.

முதல் பல்லவன் மஹாபாரத காலத்தைச் சேர்ந்த அஸ்வத்தாமனுக்குப் பிறந்தவன். மஹாபாரதப் போர் முடிவில், அஸ்வத்தாமன் மாபெரும் அழிவை உண்டாக்குகிறான். எனினும் அவனைக் கொல்லாமல் காட்டுக்குள் துரத்தி விடுகின்றனர். அதற்குப் பிறகு அவன் என்ன ஆனான் என்று பல்லவர் கல்வெட்டுகளின் மூலமாகத்தான் தெரிகிறது. அவன் காட்டுக்குள் வாழ்ந்திருக்கிறான். அவனுக்கும் ஒரு அப்சர மங்கைக்கும் குழந்தை பிறக்கிறது. அந்தக் குழந்தையை அஸ்வத்தாமன் பார்க்கும் போது, அது, தளிர்களாலான ஒரு படுக்கையில் கிடத்தப் பட்டிருக்கிறது. தளிர்களுக்கு சமஸ்க்ருதத்தில் 'பல்லவ' என்று பெயர். குழந்தையைப் பார்த்த அஸ்வத்தாமன், தளிர் என்று பொருள் படும் 'பல்லவ' என்கிறான். அதுவே அந்தக் குழந்தையின் பெயராகிறது.

ஆதாரம்: கசக்குடி பட்டயம் (South Indian Inscriptions, Vol 2, Part III, No 73)

ஆதாரம்: அமராவதி தூண் கல்வெட்டு (South Indian Inscriptions, Vol 1, Part I, No 32)

இதன் அடிப்படையில், பல்லவன் பிறப்பை, 'தளிரில் பிறந்தவன்' என்று சொல்லலாம்.

இந்த மாதிரி சொல்லும் வழக்கம் இன்னொரு விதத்திலும் இருக்கிறது. இதை ஜோதிடப் புத்தகங்களில் காணலாம். எந்த ஜோதிடப் புத்தகத்திலும் 'ஜனன காலப் படலம்' என்று ஒரு பகுதி இருக்கும். குழந்தை பிறக்கும் பிரசவ வீட்டின் லட்சணம் இதில் விவரிக்கப்பட்டிருக்கும். குழந்தை பிறக்கும் இடம் எது என்பதை ஜனன கால ஜாதகத்தை வைத்துச் சொல்ல முடியும். குழந்தை பிறந்தது நீர் நிலைக்கு அருகிலா, நதிக்கு அருகிலா, கிணற்றுக்கு

அருகிலா,வாய்க்காலிலா, குளக்கரையிலா, அல்லது நீருள்ள வயலுக்கு அருகிலா என்றும் குறிப்புகள் உள்ளன.

அதை போல, வீட்டிலா, வெளியிலா, சிறையிலா, தொழுவத்திலா, கோயிலுக்கு அருகிலா, அல்லது யாக சாலைக்கருகிலா என்றும் குறிப்புகள் மூலம் சொல்ல முடியும். இவற்றின் அடிப்படையில், மிதிலை மன்னன் ஜனக ராஜன் யாக சாலையை உழும் போது , சீதை கிடைத்தாள் (அல்லது) பிறந்தாள் என்றால், இரண்டு அர்த்தங்கள் இருக்கின்றன. ஒன்று, சீதை பிறந்த இடம் யாக சாலைக்கு அருகில் இருந்திருக்க வேண்டும். அல்லது ஜனகர் யாக சாலையை உழுது கொண்டிருக்கும் போது சீதை பிறந்திருக்க வேண்டும்.

இதை போன்றே பொய்கை ஆழ்வார் பொய்கையில் பிறந்தார் என்றால், அவரை அவர் தாயார் பிரசவித்த இடம், பொய்கைக்கு அருகில் இருந்தது என்று அர்த்தம்.

பூதத்தாழ்வார் மாதவிப் பூவில் பிறந்தார் என்றால், மாதவிப் பூப்பந்தல் அருகே பிறந்தார் என்றும் பொருள் கொள்ளலாம். அல்லது, பல்லவனைப் போல இவர் பிறந்தவுடன் மாதவிப் பூப்படுக்கையில் கிடத்தப் பட்டிருக்க வேண்டும்.

இவரைப் போன்றே பேயாழ்வாரும், செவ்வல்லிப் பூப்படுக்கையில் கிடத்தப்பட்டிருக்கலாம். அல்லது செவ்வல்லிக் குளத்தருகே பிறந்திருக்கலாம்.இவர்களைப் போன்றே ஆண்டாள் ஜனனமும் சொல்லப்பட்டிருக்க வேண்டும்.

**ஆண்டாள் பிறப்பு.**

ஆண்டாள் பிறப்பைப் பற்றி மூவாயிரப்படி குரு பரம்பரை ப்ரபாவம் என்ன சொல்கிறது என்று பார்ப்போம்.

பெரியாழ்வார் துளஸிப் பாத்தியைக் கொத்திக் கொண்டிருக்கும் போது அதனின்று ஆண்டாள் தோன்றினாள் என்று ஆச்சார்யர்கள் கூறியுள்ளார்கள். இதுவரை நாம் கொடுத்த விளக்கத்தின் படி, ஆண்டாள் பிறந்த அறைக்கு அருகில் துளசி வனம் இருந்திருக்க வேண்டும். அல்லது பெரியாழ்வார் துளஸிப் பாத்தியைக் கொத்திக் கொண்டிருந்த போது, ஆண்டாள் பிறந்திருக்க வேண்டும். துளசியின் சம்பந்தம் இருக்கவே, அந்தத் துளசியும் பெருமாளுக்கு உகந்த மாலையாக இருக்கவே, ஆழ்வார் குழந்தைக்கு, 'பூமாலை' என்னும் பொருள் கொண்ட 'கோதை' என்னும் பெயர் இட்டார்.

துளசி வன சம்பந்தம் பின்னால் ஆழ்வாரால் நினைத்துப் பார்க்கப் படுகிறது. மூவாயிரப்படி குரு பரம்பரை ப்ரபாவம் கூறுவதை பார்ப்போம்:

*திருத்துழாய்ப் பாத்தியில் ப்ராதுர்பாவத்தாலும் ஸ்வப்நத்தாலும் "பின்னைகொல்? நிலமாமகள்கொல்? திருமகள் கொல்? பிறந்திட்டாள்" என்று உகந்தருளி—*

எந்தப் பெண்ணுக்குப் பூமாலை என்று பொருள் படும் கோதை என்று பெயர் சூட்டினாரோ, அந்தப் பெண் அணிந்த மாலையைத் தனக்கும் சூட்ட வேண்டும் என்று பெருமாளே கனவில் வந்து கூறிவிடவே, பெருமாளுக்கும், கோதைக்கும் உள்ள தொடர்புகள் புலனாகின்றன. மாலை மாற்றிக் கொள்வது என்பது கணவன் மனைவிக்குள்தான் நடக்கும். இங்கு பெருமாள் கோதை சூட்டிக் கொண்ட மாலையை, தான் சூட விழைகிறார்.

அப்படியென்றால் கோதை யார்? பெருமாளின் மனைவியா? பெருமாளுக்கு மூன்று மனைவியர் என்பது மரபு. அவர்கள் ஸ்ரீதேவி, பூமதேவி, நீளா தேவி. இவர்களுள் கோதை யார் என்று பெரியாழ்வார் ஆச்சரியப்படுகிறார். அவள் பிறந்தது நினைவுக்கு வருகிறது. துளஸிப் பாத்தியில் தோன்றியவளாயிற்றே.ஆக, இவள் பூமா தேவின் அவதாரமோ என்ற எண்ணம் எழுகிறது. துளஸிப் பாத்தி சம்பந்தத்தினாலேயே ஆண்டாளை பூமாதேவியின் அவதாரம் என்கிறோம்.

மானுட ஜென்மமாக வந்ததினால் அவள் ஆழ்வாருக்குப் பிறந்தது உண்மைதான். சூட்சுமமாக அவளது தெய்வீக நிலை தெரியவே, அவள் பிறந்த போது ஆழ்வார் துளஸிப் பாத்தியை சீர் செய்து கொண்டிருக்கவே, அல்லது, அவள் துளசிச் செடிக்கருகில் பிறக்கவே, அவள் துளசி வனத்திலிருந்து தோன்றினாள் என்று ஆச்சார்யர்கள் அருளியிருக்கிறார்கள்.

வெளிப்படையாக ஆச்சார்யர்கள் சொல்லும் சூட்சுமம், முதலாழ்வார்கள்' அயோனிஜர்கள்' - அதாவது கருவிலிருந்து பிறந்தவர்கள் அல்லர், ஏனெனில் இவர்கள் விசேஷப் பிறவிகள். மானுடத்தை தாண்டிய தெய்வப் பிறவிகள்.ஆண்டாள் விஷயத்தில் அவள் பூமாதேவியின் அவதாரமே. துளஸிப் பாத்தி என்பதன் மூலம் பூமி சம்பந்தம் தெரிகிறது.

சீதையும் பூமாதேவியின் அவதாரமே. அங்கு யாக சாலை சம்பந்தம் அவளை பூமாதேவி என்று காட்டுகிறது. இவர்களது விசேஷத் தன்மையை பிறப்பிலிருந்தே காட்டுவதற்கு அமைப்புகள் இருக்கவே, ஆச்சார்யர்களும், ரிஷிகளும் அவற்றைத் தூக்கிக்

காட்டியிருக்கிறார்கள். அதைக் கொச்சைப் படுத்துவது, நம்முடைய குறைபாட்டினையும், புரிதல் இல்லாத கண்ணோட்டத்தையும் காட்டுகிறது.

**தமிழை ஆண்டாளை வைரமுத்து அறிந்தவரா?**

இனி நாம் முதலில் எடுத்துச் சொன்னவாறு, சங்கத் தமிழை ஆண்டாள் எவ்வாறு ஆண்டாள் என்பதை வைரமுத்து காணத் தவறி விட்டார். அதற்குச் சிகரமாக விளங்குவது அவர் கேட்கும் சமூகக் கேள்வி. கனவு காணும் வேளையிலும் கரை விட்டோடும் துணிச்சல் ஆண்டாளுக்கு எப்படி வாய்த்தது என்றும், இதை விடுதலை என்றும் கூறும் வைரமுத்து, இந்த விடுதலை ஆண்டாளுக்கு எப்படிக் கிட்டியது என்பதை சமூகக் கேள்வியாக வைக்கிறார். இந்தக் கேள்வியில் ஆரம்பித்ததுதான் எல்லா அநர்த்தமும், தவறான சித்தரிப்புக்களும்.

**ஆண்டாளின் 'துணிச்சல்'**

ஆண்டாளின் துணிச்சலைப் பற்றி இவர் என்ன கேட்பது ? நாச்சியார் திருமொழியின் 12-ஆம் பத்தின் கடைசியில் ஆண்டாளே தனக்குத் துணிச்சல் இருக்கிறது என்று சொல்கிறாள் -

"தன்னைத் தமர் உய்த்துப் பெய்ய வேண்டித்

தாழ் குழலாள் **துணிந்த துணிவை...**"

இந்தத் துணிவுக்குத் துணை போவது, தொல்காப்பியத்தின் களவியல் சூத்திரம் !

உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்

செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று..." (பொருளதிகாரம் 111)

இதற்கு உரையாசிரியர் இளம்பூரணர், 'உயிரினும் நாண் சிறந்தது; அதனினும் குற்றம் தீர்ந்த காட்சியினையுடைய கற்புச் சிறந்தது: என முன்னோர் கூற்றையுட் கொண்டு தலைவன் உள்ளவிடத்துச் செல்லலும், வருத்தமில்லாச் சொல்லைத் தலைவி சொல்லுதலுமாகிய அவ்வகை பிறவும் தோன்றும் அவை பொருளாம் என்றவாறு.' என்கிறார்.

இதற்கு, குறுந்தொகை - பதினொன்றாம் பாடலை இளம்பூரணர் உதாரணமாகக் காட்டுகிறார். இதே கருத்தை நாச்சியார் திருமொழியின் 12 -ஆம் பத்து முழுவதும் ஆண்டாள் காட்டுகிறாள். அவற்றில், நாணைக் கடந்து, தலைவனாம் சீதரன் இருக்குமிடம் செல்ல விழைகிறாள் ஆண்டாள். அந்த இடத்தில்தான் தன் தந்தை, தாயைக் குறிப்பிடுகிறாள். இவர்கள் என்னைக் கொண்டு போய் விடவில்லை என்றால், நானே சென்று விடுவேன். இதனால் வரும் பழியைத் தவிர்க்க

முடியாது என்று பயமுறுத்துகிறாள். அந்தப் பத்து பாசுரங்களில் அவள் காட்டும் துணிவு சங்க காலக் களவியல் பாற்பட்டது.

அந்தப் பாடல்கள் முடிவில் அவள் என்ன சொல்கிறாள் தெரியுமா ? புதுவையர் கோன் விட்டு சித்தன் கோதை **துணிந்த துணிவை**, இன்னிசையால் சொன்ன இந்த செஞ்சொல் மாலையை, **ஏத்த வல்லாருக்கு வைகுந்தம் இருப்பிடமாகும்!** இதுதான் வைரமுத்து வைக்கும் சமூகக் கேள்விக்கு ஆண்டாளே அளிக்கும் பதில்!!!

இதைத் தெரிந்து கொள்ள இவருக்கு பக்தி வேண்டாம். இவர் பெற்றதாக நினைக்கும் சக்தியும் இவருக்கு வந்து சேரவில்லை. ஆனால் ஆண்டாள் பாடிய கண்ணோட்டத்தில் இவர் பார்த்து, அதன் சங்கத் தமிழ் மாண்பைத் தேடிக் கண்டுபிடித்திருந்தால் இப்படிப்பட்ட சொத்தைக் கேள்விகளைக் கேட்டிருக்கமாட்டார்.

**ஆண்டாள் பாடியது மரபு சார்ந்த அகப்பொருள்தான்**

ஆண்டாள் அகப்பொருளைத்தான் பாடினாள். வைரமுத்துவைப் பொறுத்த வரையில், சொல்ல முடியாதது அகம். சொல்ல முடிந்தது புறம். சொல்ல முடியாத அகப்பொருளை ஆண்டாள் எவ்வாறு கையாண்டாள் என்று சொல்ல வரும்போது வைரமுத்துக்கு ஏகப்பட்ட '**சமூகக் கேள்விகள்**' எழும்பி விட்டன. அதன் அடிப்படையில் "**ஆராய்ச்சிக் கட்டுரைகளைக்**" காட்டி ஆண்டாளின் சரித்திரத்தையே வைரமுத்து எழுதிவிட்டார்

சொல்லமுடியாதது என்று வைரமுத்து கருதும் அகப்பொருளைத்தான் **திருவள்ளுவர் 3-ஆம் பாலாகச்** சொல்லி வைத்துள்ளார். அவர் சொல்லாத எதையும் ஆண்டாள் சொல்லிவிடவில்லை.

உதாரணமாக ஆண்டாள் தனது கனவினை உரைக்கும் "வாரணமாயிரம்"பாசுரங்கள் திருவள்ளுவரால் "**கனவு நிலை உரைத்தல்**" (அதிகாரம் 122) என்று சொல்லப்பட்டவையே.

நாச்சியார் திருமொழியின் 4-ஆம் பத்தில்,

"ஊடல் கூடல் உணர்தல் புணர்தலை
நீடு நின்ற நிறை புகழ் ஆய்ச்சியர் ......"

என்று ஆண்டாள் முடிக்கும் 10 பாசுரங்களும் திருவள்ளுவர் கூறும்

'ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம்
கூடியவர் பெற்ற பயன்" (குறள் 1109)

என்பதன் இலக்கிய விரிவாக்கமே.

அன்று உலகமளந்தவன் இன்று ஏன் என்னை நலியச் செய்கிறான் என்று குயிலிடம் ஆண்டாள் முறையிடுவது (நா. திருமொழி 5-10)

'பருவராலும், பைதலும்' என்று தொடங்கும் குறளில் (1197) மன்மதன் ஏன் இருவரில் ஒருவரை மட்டும் நோகச் செய்கின்றான் என்று திருவள்ளுவர் எழுதியதற்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

எல்லாவற்றுக்கும் முத்தாய்ப்பாக ஒன்றைச் சொல்லலாம். வள்ளுவர் பாடியது முப்பால். அதில் மூன்றாம் பாலான இன்பத்துப் பாலைக் கடந்துதான் வீடு பேரின்பம் அடைய முடியும். வீடு பேரின்பத்தைப் பற்றி, வள்ளுவர் மட்டுமல்ல, எவருமே எழுதி வைக்கவில்லை. ஆனால் என்ன செய்தால் வீடு பேரின்பம் கிடைக்கும் என்பதைப் பற்றி ஆண்டாள் எழுதினாள். எழுதியது மட்டுமல்லாமல், அப்பேரின்பத்தை அரங்கன் சந்நிதியில் அடைந்தும் காட்டினாள். இதைப் புரிந்து கொண்டவர்கள் அக்காலத்துத் தமிழர்கள், ஆச்சார்யப் பெருமக்கள்.

அப்பேரின்பத்துக்கு அடிப்படை அகப்பொருள். அகப்பொருள் என்பது சங்கத் தமிழில் அதிகம் பேசப்பட்டது. முதல் சங்கத்தின் முக்கியப் பொருள் அதுதான். இறையனார் எனப்படும் சிவ பெருமான் அந்தப் பொருளில்தான் தருமிக்குப் பாடல் கொடுத்தார். அந்தப் பொருளில்தான் 'இறையனார் அகப்பொருள் ' என்னும் இலக்கணம் கொடுத்தார்.

அகப்பொருள் என்பது என்ன ? திரைப் பாடல்களில் இவர்கள் எழுதும் காமரசம் சொட்டும் பாடல்களா அவை ? இல்லை.

**அகப்பொருளின் அடிப்படை அன்பு.**

இறையனார் அகப்பொருளின் முதல் வரியே "அன்பின் ஐந்திணை களவெனப்படுவது" என்றுதான் ஆரம்பிக்கிறது.

மாந்தராய்ப் பிறந்த இரண்டு ஆத்மாக்களுக்குள் ஏற்படும் அன்பை விவரிப்பது அகம். அதில் கிடைப்பது சிற்றின்பம்,

மூன்றாம் பாலான இன்பத்துப் பாலின் மூலம் இதை உணர்ந்தவன், **நிலையான அன்பு எனப்படுவது ஆத்மாவுக்கும், பரமாத்மாவுக்கும் இடையே இருப்பதுவே** என்று உணர ஆரம்பிக்கிறான். அந்த அன்பை பரமாத்மாவிடம் நிலை பெறச் செய்கிறான். அதில் அவனுக்கு கிடைப்பது **பேரின்பம்**, அதுவே **வீடு பேறு** எனப்படுவது.

அகப்பொருளின் இறுதி நிலையான அந்த அன்பை, ஆண்டாள் சங்கத் தமிழில் நிறுவுகிறாள். அந்த அன்பை, அறியாய் பருவத்திலிருந்தே காட்டும் வண்ணம் நம் தமிழ்ச் சமுதாயம் பாவை நோன்பாக வடித்தது. ஆற்று மணலில் பாவை வடிவம் செய்யத் தூண்டி, சிற்றில் இழைக்கச் செய்து

- என்று எல்லா விளையாட்டுகளிலும் தெய்வத்தை நோக்கியே நம்மை ஆற்றுப்படுத்துகிறது சங்க இலக்கியம். அவற்றுக்கெல்லாம் இலக்கணமாக வாழ்ந்து, முடிவில் வீடு பேற்றுக்கு அந்த அகப்பொருளையே ஆண்டாள் கையாண்டதை எப்படியெல்லாம் '**சமூகக் கேள்வி**களாக' ஆக்கி விட்டார் வைரமுத்து.

தமிழைத் துய்த்தவராகத் தன்னைக் காட்டிக் கொள்ளும் வைரமுத்து , ஆண்டாளின் தமிழ் என்பது எவ்வாறு சங்கத் தமிழ் ஆகும் என்று ஆராய்ந்திருக்க வேண்டும். அவருக்கு நல்ல ஆய்வுப் புத்தகங்கள் கிடைக்கவில்லை போலிருக்கிறது. நான் அறிந்த ஆய்வுப் புத்தகத்தை அவருக்கு அறிமுகப்படுத்துகிறேன்.

**பண்டிதை எஸ். கிருஷ்ணவேணி அம்மையார்** என்பவர் எழுதிய '**வில்லிபுத்தூர் விளக்கு**' என்னும் நூல் ஸ்ரீ வில்லிபுத்தூர் தேவஸ்தானம் ட்ரஸ்ட் போர்டார் சார்பில் **1959**-ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

அருமையான இந்தப் புத்தகத்தில், பன்முனை ஆராய்ச்சிகளுடன், '**ஆண்டாளும் அகப்பொருள் நூல்களும்**' என்னும் தமிழாராய்ச்சிப் பகுதி ஒன்று இருக்கிறது.

அதில் எத்தனை, எத்தனை இலக்கிய, இலக்கண விவரங்கள் ஆண்டாள் பாசுரங்களில் சுட்டிக் காட்டப் பட்டுள்ளன! என் சிற்றறிவுக்கு, அவை காணப்படும் நூல்களை மட்டுமே எடுத்துக் காட்ட முடிகிறது. அவை என்ன என்று தெரிந்து கொள்ளுங்களேன்.

*திருக்குறள்*

*அகநானூறு - 139, 286*
*முல்லைக்கு கலி (கலித்தொகை) - 109*
*குறுந்தொகை - 133, 220, 391, 65, 50, 54, 188, 11, 395, 150, 18.*
*நற்றிணை - 243, 289, 302, 381, 387, 214, 238, 241, 143.*
*இறையனார் அகப்பொருள்*
*அகப்பொருள் விளக்கம்- 206*
*தஞ்சை வாணன் கோவை - 286, 287, 226, 217, 277, 253, 291, 409, 245.*
*மாறன் கோவை - 459*

இந்த ஆராய்ச்சியில் ஒரு சதவிகிதம் கூட வைரமுத்து செய்யவில்லை. அவர் மன்னிப்பு கேட்க வேண்டியது ஆண்டாளிடம் மட்டுமல்ல, தமிழ்த் தாயினிடமும்தான்.

**ஆண்டாள் சரித்திரத்தை நம்பாத வைரமுத்து**

வைரமுத்துவின் சரித்திர ஆராய்ச்சியில், அர்ச்சாவதாரமாகிய ஒரு விக்கிரகத்தோடு, குருதியும் இறைச்சியும் கொண்ட ஒரு மானிடப் பெண் கலந்ததுண்டா என்னும் கேள்விக்கு விடை சொல்ல ஒரு ஆவணம் இருக்கிறது என்று **'கோயிலொழுகு'** வில் காணப்படும் குலசேகர பெருமாள் ஆழ்வாரது மகளைப் பற்றிக் குறிப்பிடுகிறார். சோழவல்லி என்னும்தன் மகளை ஆழ்வார் ஸ்ரீரங்கம் அழகியமணவாளப்பெருமாளுக்கு மணம் செய்விக்கிறார். இவ்வளவுதான் சொல்லப்பட்டிருக்கிறது. இதனை ஒரு ஆவணமாகக் கூறுவதன் மூலம், இவர் எழுப்பிய கேள்விக்கு எந்தவிதமான பதிலைத் தருகிறார் என்பதற்கு 20-ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட ஆய்வுக் கட்டுரையை மேற்கோள் காட்டுகிறார். அது சரியே என்றும் வாதாடுகிறார்.

சோழவல்லியின் திருமணத்தில் சொல்லப்படாத ஒரு விஷயம் ஆண்டாள் திருமணத்தில் இருக்கிறது. சோழவல்லியின் திருமணத்துக்குப்பின் என்ன ஆயிற்று என்று எங்கும் சொல்லப்படவில்லை. ஆனால் ஆண்டாள் விஷயத்தில் அவள் அழகிய மணவாளன் அருகில் சென்று **'அந்தர்பவித்தருளினாள்'** - அதாவது மறைந்து விட்டாள் என்றே சொல்லப்பட்டிருக்கிறது. இல்லாத ஒன்றை ஆழ்வார்களும், ஆச்சார்யர்களும் சொல்லியிருக்க மாட்டார்கள்; எழுதியிருக்கவும் மாட்டார்கள். உள்ளதை உள்ளபடிதான் சொல்லியிருப்பார்கள், அல்லது முன்பு சொன்னதுபோல் சூட்சுமமாகச் சொல்லியிருப்பார்கள். வைணவர்கள் பொய்யாகவோ அல்லது தவறாகவோ பேசவோ, செய்யவோ மாட்டார்கள் என்பதை நிரூபிக்கப் பாம்புக் குடத்தில் கையை விட்டவர் குல சேகர ஆழ்வார்.

அப்படி இருக்க, ஆண்டாள் மறைந்தது எப்படி என்று ஆராயப்புகில், அவளைப் போலவே மறைந்த சம்பவங்களுடன் தான் ஒப்பீடு செய்ய வேண்டும் - நாம் ஆரம்பத்தில் ஆழ்வார்களது அதிசயப் பிறப்பை, தளிர் என்னும் பல்லவன் பிறப்பைச் சொல்லும் கல்வெட்டுச் சான்றுகளுடனும் , அப்படிப்பட்ட பிறப்பின் உள் அர்த்தத்தைக் காட்டும் ஜோதிடப் புத்தகச் சான்றுகளுடனும் ஒப்பீடு செய்ததை போல.

அவளைப் போலவே மறைந்த சம்பவம், ஆண்டாள் காலத்திற்கு சில நூற்றாண்டுகள் முன் **கண்ணகியின் காலத்தில் நடந்தது** என்று அனைத்துத் தமிழ் மக்களும் போற்றும் சிலப்பதிகாரம் கூறுகிறது. அதில் கணவனை இழந்த14-ஆம் நாள் கண்ணகியின் கண் முன், இறந்த அவள் கணவன் (கோவலன்) தோன்றுகிறான். அப்பொழுது ஒரு வானவூர்தி வருகிறது. பூமாரி பொழிய அவள் தன் கணவனுடன் அந்த வானவூர்தியில்

ஏறிச் சென்று மறைகிறாள். இதை அங்கு வாழ்ந்த மலைவாணர்கள் எனப்படும் வேட்டுவரும், வேட்டுவித்தியரும் தங்கள் கண்களால் பார்க்கின்றனர். **இதை வைரமுத்துவும், அவர் நம்பும் ஆய்வாளர்களும் ஏற்றுக் கொள்கிறார்களா ?**

**ஏற்றுக் கொண்டால் ஆண்டாள், இறைவன் பக்கலில் மறைந்ததை ஏற்றுக் கொள்ள வேண்டும்.** அதற்கு கண், காது, மூக்கு வைத்து, நடக்காத ஒன்றை நடந்ததாகச் சொல்லக் கூடாது.

கண்ணகி சம்பவத்தை ஏற்றுக் கொள்ளாவிடில், **தமிழ் நூல் எதனையுமே இவரும், இவரைப் போன்ற ஆய்வாளர்களும் தொட்டுக் கூடப் பார்க்க வேண்டாம்.** ஏனென்றால் அந்த சம்பவங்கள் காட்டும் உண்மைகள், கருத்துக்கள், தொல்காப்பியச் சான்றுகள் எவையுமே இவர்களுக்குப் புரியாது. இதுவரை புரிந்திருக்கவும் இல்லை.

**இவர்கள் தமிழ்த் தொண்டாற்ற விரும்பினால், சினிமாத் தமிழுடன் நிறுத்திக் கொள்ளட்டும். அதை விடுத்து, பழந்தமிழை ஆராயப் புகுந்தால் அதை எப்படி ஆராய வேண்டுமோ அதன்படி ஆராய வேண்டும்.**

சங்க காலம் தொடங்கி, ஆழ்வார்கள், நாயன்மார்கள் வரை, வீடு பேற்றைத் தரக் கூடிய அறம், பொருள், இன்பத்தைப் பற்றியே பேசியிருக்கிறார்கள்.

"பேசினார் பிறவி நீத்தார், பேருளாளன் பெருமை பேசி.

ஏசினார் உய்ந்து போனார் என்பது இவ்வுலகின் வண்ணம்."

இதைப் புரிந்து கொண்டு, உய்ந்து போய் வீழ வேண்டாம்.

வாழும் வகை அறிந்து கொள்ளுங்கள்.

><><><><><><><><><><><><><><><><><

# 4. 'தமிழை ஆண்டாள்'

# கட்டுரையில் வைரமுத்து செய்த 18 சறுக்கல்கள்

தமிழை ஆண்டாள் என்னும் 'ஆய்வுக் கட்டுரையை' மூன்று மாத ஆராய்ச்சிக்குப் பின், ஆசைப்பட்டு எழுதினார் கவிப் பேரரசு வைரமுத்து. அவர் செய்த 'ஆராய்ச்சியின்' அழகை முந்தின கட்டுரையில் கண்டோம். ஆண்டாள் தமிழைப் பற்றிப் பேசும் அவரது அற்புதத் தமிழை இந்தக் கட்டுரையில் காணலாம். தமிழை ஆற்றுப்படுத்துவதாகச் சொல்லிக் கொள்ளும் கவிப் பேரரசு வைரமுத்து அவர்கள் தமிழை எவ்வாறு ஆண்டார்? தமிழை எந்த அளவு அறிந்திருந்தார் என்பதை அறிய விரும்புபவர்கள் இந்தக் கட்டுரையைக் கட்டாயம் படிக்க வேண்டும்..

கதையெழுத அவருக்குச் சொல்லிக் கொடுக்கத் தேவையில்லை. பல காலம் தமிழில் தொழில் செய்து வந்தவர். அது தீட்டிய திறமையை வெளிப்படுத்தும் வண்ணம் ஒரு நல்ல பின்னணியுடன் கட்டுரையை ஆரம்பிக்கிறார்.

மாதமோ மார்கழி. காலமோ அதிகாலை. இங்கு ஆண்டாள் **'அமிலச் சோதனை'** செய்கிறாள். அதாவது நெடுங்குளிரில் நீராடுவதால், உடல் வெப்பத்துக்கும், மனத் திட்பத்துக்கும் ஏற்படும் சோதனை இது என்கிறார். நீராடினவர்கள் சறுக்கினார்களோ இல்லையோ, இங்குதான் வைரமுத்துவின் முதல் சறுக்கலைப் பார்க்கிறோம்.

**சறுக்கல்:1. அமிலச் சோதனை**

**'அமிலச் சோதனையை' ஆண்டாளா செய்தாள்?** அல்லது அவள்தான் அதைக் கண்டு பிடித்தாளா? வைரமுத்து கூறும் அமிலச் சோதனை, பெண்பால் பிள்ளைத் தமிழில் இருக்கிறதே? அது எப்படி?

பெண்பால் பிள்ளைத் தமிழில் பாவைப் படலம் என்பது ஒரு காலக் கட்டமாகும். இது ஐந்து முதல் ஒன்பது வயதுக்கு உட்பட்ட சிறுமிகள்செய்வது. இதைக் கூறும் பிங்கல நிகண்டு **(1369)**,

''**பனி நீர்** தோய்தலும், பாவையாடலும்'

என்று சொல்கிறதே, இந்த அமிலச் சோதனையை ஐந்து வயது முதற்கொண்டே பழந்தமிழ்க் குழந்தைகள் செய்திருக்கிறார்களே? அதை வைரமுத்து அறியவில்லையா? அறிந்திருந்தால் அத்தனைச் சிறிய வயதுக் குழந்தைகளை சில்லிடும் பனி நீரில் குளிக்க விட்டிருக்கிறார்களே - இது என்ன அநியாயம் என்று சமூகக் கேள்வி கேட்டிருக்கலாமே?

இது போகட்டும், பாவை நோன்புக்குச் சிகரமாக ஒரு சங்கப் பாடல் இருக்கிறதே, அதையாவது வைரமுத்து அறிவாரா ?

**ஆசிரியர் நல்லந்துவனார்** பாடிய அப்பாடலில்

'அம்பா ஆடலின் ஆய் தொடிக் கன்னியர்'

- அதாவது தம் தாயினை ஒட்டி நின்று நீராடக்கூடிய சிறு பருவத்தவரான பெண்கள்,

'பனி புலர்பு ஆடி'

- அதாவது பனியையுடைய வைகறைப் பொழுதிலே நீராடி - அதிலும், ஓடும் வையை ஆற்றில் நீராடி, அந்த ஆற்றிலிருந்து அடிக்கும் ஊதக் காற்றில் நின்று கொண்டிருப்பார்களாம். (பரிபாடல் 11).

அமிலச் சோதனையை அன்றே ஆரம்பித்து விட்டார்களே ! என்னவோ ஆண்டாள் புதிதாகக் கண்டுபிடித்தது போல வைரமுத்து கூறுகிறாரே ?

இந்தப் பாடலையும் வைரமுத்து அறிந்து கொள்ளாமல் போய் விட்டாரே என்று வருத்தமாக இருக்கிறது. இந்தப் பாடலில் **எத்தனை சமூகக் கேள்விகளுக்கு வாய்ப்பிருக்கிறது தெரியுமா ?**

இந்தப் பாடலில், பனி பிரியாத வைகறைப் பொழுதில் ஆற்றங்கரையில் அந்தணர்கள் ஹோமம் வளர்த்த செய்தி சொல்லப்பட்டுள்ளது. அது மட்டுமா, நடுங்கும் குளிரில் சிறுமிகள் தங்கள் தாய்மார்களுடன் ஆற்றில் குளிக்க வேண்டும். குளித்த பிறகு ஈர உடையுடன் அப்படியே இந்த ஹோமத் தீயை வலம் வர வேண்டும். அதன் வெப்பத்தில் இவர்கள் உடுத்தின துணியும் காய்ந்து விடும். எப்படிப்பட்ட அமிலச் சோதனை செய்திருக்கிறார்கள் ?

இதைச் செய்யத் தூண்டியவர்கள் அந்தணர்கள் போலல்லவா இருக்கிறது ?

மனித உரிமை மீறல் சம்பந்தப்பட்ட **இந்தச் சோதனையைச் செய்தவர்கள் பார்ப்பனர்களா என்ற சமூகக் கேள்வியை** ஆராய்ச்சியாளர்கள் பார்வைக்கு கொண்டு செல்ல, வைரமுத்து தவறிவிட்டார் என்றே தோன்றுகிறது.

இனி வருகிறது அடுத்த சறுக்கல்.

வைரமுத்து சொல்கிறார், “பாவை நோன்பு என்பது சடங்கு. கண்ணன் என்பதொரு காரணம்”.

வைரமுத்துவின் இந்தக் கருத்து பிள்ளைத் தமிழ் இலக்கணத்திலோ, அல்லது நல்லந்துவனார் பாடலிலோ காணப்பட வில்லையே ? எந்த அடிப்படையில் இவ்வாறு எழுதி இருக்கிறார் ?

இதையடுத்து இன்னொன்றும் சொல்கிறார்:

> ***பாகவதத்தில் சொல்லப்படும் கார்த்தியாயினி நோன்புக்கும், ஆண்டாளின் திருப்பாவை நோன்புக்கும் அடிப்படையில் ஒரு வேறுபாடு உண்டு. கண்ணனே கணவனாய் அமைய நோற்பது கார்த்தியாயினி நோன்பு. நல்லதோர் கணவனை அடைய நோற்பது மட்டுமே திருப்பாவை நோன்பு. 'எம் கொங்கை நின் அன்பர் அல்லார் தோள் சேரற்க' என்பதே நோன்பு. ஆனால் தாங்கள் நலம்காண வேண்டும் என்ற தன்னலம் தாண்டி, நாடு நலம்காண வேண்டும் என்ற பொதுப்பண்பில் இயங்குவதுதான் நோன்பின் மாண்பு.***

இதைப் படித்தவுடன் மிகவும் சந்தோஷப்பட்டேன், ஸ்ரீமத் பாகவதத்தைக் கூட ஆராய்ந்திருக்கிறார் போல இருக்கிறதே. ஸ்ரீமத் பாகவதத்தில்தான் காத்யாயனி (கார்த்தியாயினி அல்ல) நோன்பு சொல்லப்பட்டிருக்கிறது. அதை ஆண்டாள் செய்த நோன்புடன் ஒப்பீடு செய்கிறார். அதுவும் எப்படி? கண்ணனே கணவனாக வேண்டும் என்று செய்வது காத்யாயனி நோன்பு; நல்ல கணவன் அமைய வேண்டும் என்று நோற்பது ‘மட்டுமே’ ஆண்டாள் - அதாவது திருப்பாவை நோன்பாம்.

நானும் திருப்பாவையைத் தேடித் தேடிப் பார்த்து விட்டேன், கணவனை அடைய வேண்டியே நோன்பு இருந்தார்கள் என்று திருப்பாவையில் எந்த இடத்திலேயும் சொல்லப்படவில்லையே ? பறையைச் சுற்றித்தானே ஆண்டாளது திருப்பாவைப் பாடல்கள் இருக்கின்றன ? பறையை எடுத்துக் கொண்டு போனார்கள். ‘நாராயணனே நமக்கே பறை தருவான்‘ என்று சொன்னார்கள். அதற்கு மாறாக ‘இறைவா நீ தாராய் பறை’ என்றார்கள்.’இற்றைப் பறை கொள்வான்‘ என்றார்கள். உடனேயே ‘அன்று காண்’ என்று சொன்னார்கள். கடைசியில் **‘அங்கப் பறை கொண்டவாற்றைப்’ பற்றி சங்கத் தமிழில் பாடினேன்** என்றுதானே ஆண்டாள் சொல்லியிருக்கிறாள் ?

வைரமுத்து ஆராய்ந்துதானே எழுதியிருக்கிறார் ? அவர் ஆராய்ந்து கண்டுபிடித்த’கணவன்’ விஷயத்தை விளக்கினால் உபயோகமாக இருக்கும்.

**இனி அவர் அறிந்த தமிழுக்கு வருவோம்.**

**காத்யாயனியைக் குறித்த - காத்யாயனிக்கும் கண்ணனுக்கும் உள்ள தொடர்பைப்பற்றி சிலப்பதிகாரத்தில் குறிப்புகள்** இருக்கின்றனவே, தமிழை ஆற்றுப்படுத்த விரும்பும் வைரமுத்து அவற்றை எப்படி அறியாமல் போனார் ?

அந்தக் குறிப்புகளை இங்கு கொடுக்கிறேன்:

காத்யாயனிக்கும், குமரிக்கும் தொடர்பு உண்டு என்று சொல்லும் மந்திரம் இருக்கிறது. அதாவது காத்யாயனி வழிபாடு முதலில் வரும். அவள் மூலம் கன்யகுமரியை வழிபட முடியும். அந்தக் கன்யகுமாரி இருப்பது தமிழ் நாட்டில்!

அந்தக் குமரி எப்படிப்பட்டவள் என்பதை சிலப்பதிகாரத்தில் காண்கிறோம். வேட்டுவ வரியில் ஒரு சிறு பெண்ணை 'குமரி' என்னும் தெய்வமாக அலங்கரிக்கிறார்கள். அவள் நெற்றியில் சிவனது மூன்றாவது கண்ணை எழுதுகிறார்கள். அவள் கையில் கொடுக்கும் பல பொருட்களுள் பாவையும், கிளியும் உள்ளன. அவளைப் போற்றும் பெயர்கள் ஒன்பது. அவை அமரி, குமரி, கவுரி, சமரி, சூலி, நீலி, மாலவற்கு இளங்கிளை, ஐயை, செய்யவள். இவற்றுள்**மாலுக்கு இளங்கிளை என்றால் திருமாலுக்கு இளையவள்** என்று பொருள். இவள் தாங்கிய ஆயுதங்களுள், திருமாலது சங்கு, சக்கரமும் உண்டு என்பதை சிலப்பதிகாரம் தெரிவிக்கிறது.

இவள் கலைமானின் மேல் இருப்பவள். மகிடன் என்னும் எருமை அசுரனது தலையைக் கொய்தவள் என்று சிலப்பதிகாரம் வர்ணிக்கிறது. ஆகவே இவளே **மகிஷாசுர மர்த்தினி** என்னும் தெய்வம் என்று தெரிகிறது.

அது மட்டுமல்ல, இவள்

"அரியரன் பூ மேலோன் அகமலர் மேல் மன்னும்

விரிகதிரஞ் சோதி விளக்காக்கியே நிற்பாய்"

என்றும் சிலப்பதிகாரம் சொல்கிறது.

இதன் பொருள் 'விஷ்ணு, சிவன், பிரம்மா' ஆகிய மும்மூர்த்திகளது உள்ளத்தில் சோதியாக வீற்றிருக்கிறாள். இதே கருத்து சிவபெருமானால் அருளப்பட்டதாகச் சொல்லப்படும் 'தேவ்யுவாச' என்று தொடங்கும் லட்சுமியைக் குறித்த சமஸ்க்ருத ஸ்தோத்திரத்தில் **'நவதுர்காம் மஹா காளீம் ப்ரம்ம விஷ்ணு சிவாத்மிகாம்'** என்று காணப்படுகிறது.

இப்படிப்பட்ட தொடர்புகளைக் காட்டும் சிலப்பதிகார வேட்டுவவரி,

'மருதின் நடந்து நின் மாமன் செய் வஞ்ச

உருளும் சகடம் உதைத்தருள் செய்குவாய்'

என்று குமரியைப் பற்றிச் சொல்லி முடிக்கிறது.

இதன் பொருள், **'இரு மருத மரங்களின் இடையே நடந்து அவற்றைச் சாய்த்து, நின் மாமனாகிய கஞ்சன் செய்த வஞ்சத்தால் தோன்றிய உருண்டு வரும் சகடத்தை உதைத்தருளினாய்"**

யாருடைய மாமன் கஞ்சன் (கம்சன்)?

மருத மரங்களுக்கிடையே ஊர்ந்தது யார்?

சகடத்தை உதைத்தது யார்?

இவையெல்லாம் கண்ணனைக் குறித்த செய்திகள்.

ஆனால் இவற்றைக் **குமரி, அதாவது, மகிஷாசுர மர்த்தினி, அதாவது திருமாலின் தங்கை செய்ததாக சிலப்பதிகாரம் கூறுகிறது.** அது எப்படி என்று வைரமுத்து ஆராய்ந்தாரா?

சிலப்பதிகாரத்தில் இவளுக்கு ஒன்பது பெயர்கள். இவளே நவதுர்கா என்னும் ஒன்பது துர்க்கைகளாக இன்றும் வழிபடப்படுகிறாள்.

நவதுர்கைகளில் ஒருத்திதான் காத்யாயனி!

காத்யாயனியை வழிபாட்டு, கண்ணனைக் கணவனாக அடைய விரும்பி யமுனைக் கரையில் மார்கழி மாதத்தில் நோன்பிருந்தனர் என்று சொல்லியிருக்கவே, காத்யாயனி என்பவள், சிலப்பதிகாரம் கூறும் **மாலுக்கு இளங்கிளை** எனப்பட்ட தங்கையாக இருக்க வேண்டும். தங்கையிடம் விண்ணப்பித்து, அவளது அண்ணனான திருமாலின் அவதாரமான கண்ணனை மணக்க விரும்பினர் ஆயர் குலப் பெண்கள்.

**இனி என்னுடைய கேள்விகள்:**

பாவை நோன்பாகட்டும், காத்யாயனி நோன்பாகட்டும், அவற்றின் **மூலத்தையும், காரணத்தையும் பண்டைத் தமிழ் நூல்கள்தானே தமக்குள் பாதுகாத்து வைத்திருக்கின்றன.** வைரமுத்து அவற்றை ஏன் அறிந்திருக்கவில்லை?

ஆண்டாள் ஆராய்ச்சியும், அவள் செய்த பாவை நோன்பு ஆராய்ச்சியும் செய்தேன் என்று சொல்லிக் கொள்கிறவர் குறைந்த பட்சம் இந்த செய்திகளையாவது சேகரித்திருக்க வேண்டுமே?

பாவை நோன்பு என்பது சடங்கு, அதற்குக் கண்ணன் ஓர் காரணம் என்றுசொல்கிறாரே,

அதன் ஆரம்பம், முதல் சங்கத்தைத் தொடங்கின சிவபெருமானால் 'குமரி' தீர்த்தத்தை ஆரம்பித்து வைத்த காலத்திலேயே உண்டானது என்று தமிழ் அறிந்த வைரமுத்துவுக்குத் தெரியவில்லையா ?

அந்தச் செய்தி திருவிளையாடல் புராணத்தில் வருகிறதல்லவா ?

பாவம், வைரமுத்து ஏன் புராணங்களைப் படிக்கப்போகிறார் - அவை தமிழ் மொழிக்கே உரியன என்றாலும் ?

அது மட்டுமா, சிலப்பதிகார வேட்டுவவரியில் சொல்லப்படும் குமரித் தெய்வத்தைக் கூட இவர் அறிந்திருக்கவில்லையே ! **அவளே மகிஷாசுர மர்த்தினி என்று சிலப்பதிகாரம் சொல்லியிருக்க,** அவளை வந்தேறி தெய்வமாகப் பார்த்த மக்கள்தானே இவருக்கு சாமரம் வீசிக் கொண்டிருக்கிறார்கள் ?

ஒன்பது பெயர் கொண்ட அவளை முன்னிட்டுத் தானே இன்றும் நவராத்திரிப் பண்டிகை தமிழ் நாட்டில் கொண்டாடப்படுகிறது ?

ஆனால் அது பார்ப்பனப் பண்டிகையாகப் பார்க்கப்படுகிறது. வேட்டுவவரி குமரியின் ஒன்பது உருவகங்களை பார்ப்பனர்கள்தான் இன்று வரை காப்பாற்றிக் கொண்டு வந்திருக்கிறார்கள். அதைத் தமிழர் பண்டிகையாக ஆக்க வேண்டாமா என்று நாம் ஒரு சமூகக் கேள்வியை வைக்கிறோம்.

வேட்டுவ வரிக் குமரி மகிடனை வதம் செய்த நாளில்தான் அவள் ஆயுதத்தைக்கொண்டாடும்விதமாக **ஆயுத பூஜை** செய்கிறோம் ? ஆனால் அது வந்தேறி பூஜை !

இவர்கள் அறிந்த தமிழால், அதாவது **இவர்கள் தமிழை அறியாததால்,** வேட்டுவவரிக் குமரி இன்று நேபாள நாட்டுக்குப் போய் விட்டாள்.

அவளை பூஜிப்பது மேற்கு வங்கத்துக்குப் போய் விட்டது.

இங்கு என்ன இருக்கிறது ?

எட்டாம் நூற்றாண்டில் கூட இங்கு இந்து மதம் இல்லை என்று சொல்லும் கூட்டம் தான் இருக்கிறது. அந்தக் கூட்டம்தான் வைரமுத்துவின் ஆண்டாள் தமிழுக்கு முட்டுக் கொடுத்துக் கொண்டிருக்கிறது.

அடுத்து அவர் சொல்வது:

***வைணவத்தின் வளர்ச்சியில் திருப்பாவை செல்வாக்குற்றது அல்லது திருப்பாவை செல்வாக்குற்றதில் வைணவம் வளர்ந்தது.***

வைணவம் திருப்பாவை காலத்தில்தான் வளர்ச்சி பெற்றது என்கிறாரே ? அப்படியென்றால் பரிபாடல் தொகுப்பில் உள்ள திருமால் பாடல்கள் பாடப்பட்ட காலத்தில் வைணவம் இல்லையா ? அல்லது வளர்ச்சி பெறவில்லையா ?வைரமுத்து அப்பாடல்களைப் படித்ததே இல்லையோ ?

குறிப்பாக ஒரு பாடலைச் சுட்டிக் காட்டுகிறேன்.

பரிபாடல்திரட்டில்இருந்தையூர்என்னும்பதியில்,வீற்றிருந்தகோலத்தில் திருமால் இருப்பதாகப் பாடல் ஒன்று உள்ளது. இந்தப் பாடலைக் கொண்டு இதில் சொல்லப்படும் பெருமான், இன்றைக்குக் **கூடலழகர்** என்று அழைக்கப்படும் திருமால் என்று தெரிகிறது. அவர் வீற்றிருந்த கோலத்தில் இருக்கவே அவர் குடி கொண்ட ஊருக்கும் 'இருந்தையூர்' என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது.

2-ஆம் சங்கத்தில் **இருந்தையூர் குருங்கோழி** என்ற புலவர் இருந்திருக்கிறார் என்று இறையனார் அகப்பொருள் உரை தெரிவிக்கிறது. இதனால் இருந்தையூர் என்னும் ஊர் 2-ஆம் சங்க காலத்திலேயே இருந்திருக்கிறது என்பது தெளிவாகிறது. இருந்தையூர் பாடலில், திருமாலை தரிசிக்கப் பலதரப்பட்ட மக்களும் கூட்டம் கூட்டமாக வந்தனர் என்றும் எழுதப்பட்டுள்ளது.

2-ஆம் சங்க காலத்திலேயே அங்கு வைணவம் தழைத்து இருந்திருக்கின்றது என்பதற்கு இந்தப் பாடல் சாட்சியாக இருக்கிறதே, வைரமுத்து இதை அறிந்து கொள்ளாமல் எப்படி தமிழ் - வைணவ ஆராய்ச்சி செய்தார் ?

பின்னாளில் இதே பதியில்தான் பெரியாழ்வார் பாண்டியனுக்கு, பரதத்வ நிர்ணயம் செய்தார். அந்தப் பதியின் திருமால் (இருந்தையூர் பெருமான்) அவருக்குப் ப்ரத்யக்ஷமானார். 2- ஆம் சங்க காலத்திலிருந்தே வைணவம் தழைத்த இடம் அது. என்னவோ புதிதாக அவர் காலத்தில் (ஆண்டாள் காலத்தில்) வைணவம் தழைத்தது போல வைரமுத்து பேசுகிறாரே ? இதுதான் அவர் சங்கப் பாடல்களை அறிந்த லட்சணமா ?

### சறுக்கல் 4: இறையோடு இழைந்த வாழ்வு பிற்காலத்திலாம்

> ***தமிழர்களின் வாழ்வியல் வரலாற்றில் ஆறாம்-ஏழாம் நூற்றாண்டுகளைப் போகிற போக்கில் புறந்தள்ளிவிட முடியாது. இயற்கையோடு இணைந்த தமிழர் வாழ்வு அந்த நூற்றாண்டுகளில்தான் இறையோடு இழைந்தது. அறம்பற்றி நடந்த தமிழர் இறைபற்றி நடக்கத் தலைப்பட்டதும் இந்த நூற்றாண்டிலேதான்.***

இதைப் படித்தவுடன், சீரியஸாகத்தான் பேசுகிறாரா, அல்லது ஏதேனும் வெளிநாட்டுப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ள கட்டுரையைப் படித்து விட்டு பேசுகிறாரா என்று சந்தேகமாக இருக்கிறது. எதை படித்தாரோ இல்லையோ, மணிமேகலையைப் படிக்கவில்லை என்பது கண்கூடாகத் தெரிகிறது.

மேலே எடுத்துக்காட்டிய இருந்தையூர் திருமால், இரண்டாம் சங்க காலத்திலேயே தமிழர் வாழ்க்கையில் இறை இழைந்து இருந்த தன்மையைக் காட்டுகிறது.

சங்க காலம் முடிந்த பின்னும், மணிமேகலை காலத்தில் இறை பக்தி தொடர்ந்திருக்கின்றது என்பதற்கு **'சமயக் கணக்கர் தந்திறங் கேட்டகாதை'** சான்றாக இருக்கிறது. அப்பொழுது தழைத்திருந்த வேத, ப்ரம்ம, சாங்கிய, வைசேடிக, சைவ, வைணவ மற்றும் 'அளவை' (ஜைமினி, வியாசர் அருளியவை) மார்க்கங்களை அறிந்து கொள்ளாமல் இப்படி ஒரு கருத்தை வைக்கிறாரே வைரமுத்து, அவர் தமிழ் அறிவு புல்லரிக்க வைக்கிறது.

### சறுக்கல் 5: மனிதர்கள் இல்லாத மதமா வைதிக மதம்?

மனிதர்கள் இல்லாமல் மதங்கள் இல்லை என்ற 'மெய்ஞானம்' வைதிக மதத்துக்கு வந்தது என்கிறார் வைரமுத்து. எந்த ஆராய்ச்சியில் இதைக் கண்டுபிடித்தார் ?

மனிதர்களைத் தேடித் தேடி 'ஆன்மாவை அறுவடை' செய்யும் மதம் இன்றும் நம் நாட்டு மக்களை வலை வீசி இழுத்துக் கொண்டிருப்பதை நாம் அறிவோம். கத்தி முனையில் நம் மக்களை மாற்றிய ஒரு மதம் துப்பாக்கி முனையில் உலகையே ஆட்டிக் கொண்டிருக்கிறது என்பதை உலகமே ஒத்துக் கொள்ளும்.

இவைதான் இவர் சொல்லும் கடவுள் இல்லாத மதங்கள். கடவுள் யார் என்று அடையாளம் காட்டாத மதங்கள். வைரமுத்துவின் பேச்சில் உள்ள அபத்தம் என்னவென்றால், கடவுளில்லாத இந்த மதங்கள், அன்றைக்கு - அதாவது அவர் சொல்லும் காலத்தில்இந்தியாவிலேயே காலூன்றவில்லை. அப்படியென்றால் இன்றைக்கு ஏன் இப்படி எழுதுகிறார் வைரமுத்து ?

அவரே பதில் சொல்லட்டும்.

உண்மை இவ்வாறிருக்க மனிதர்களை இழுக்க வைதிக மதம் முயன்றது என்று வைரமுத்து கூறுகிறாரே, எப்படி ? ஏன் ? ஏதாவது ஒரு சான்றை வைரமுத்து கொடுக்கட்டுமே ?

மேலும் அவர், சமண -புத்த மதங்களின் வீழ்ச்சிக்குப் பின் மக்களை இழுக்கும் பணி நடந்தது என்கிறார்.

சமண -பௌத்த மதங்கள் வருவதற்கு முன்பே எல்லா மக்களும் வைதிக மதத்தை ஒட்டி வாழ்ந்தனர் என்பதற்கு சங்கப்பாடல்கள் அனைத்துமே சாட்சியாக இருக்கின்றனவே ? அவற்றை வைரமுத்து அறியவில்லையா ?

அறியவில்லை போலிருக்கிறது ! கொஞ்சம் எடுத்துக் கொடுக்கிறேன்.

பத்துப்பாட்டில் உள்ள **திருமுருகாற்றுப் படை**யையாவது படித்து விட்டு **'மெய்ஞானம்'** பற்றி வைரமுத்து பேசட்டும்.

**சறுக்கல் 6: முக்தி எனபது 'புதிய சலுகை'யாம்**

மனிதர்கள் இல்லாமல் மதமா - என்று வைதிக மதம் இறங்கி வந்தது என்று வைரமுத்து கண்டு பிடித்தாரல்லவா, மனிதர்களைப் பிடிக்க என்ன யுக்தியை வைதிக மதம் கண்டுபிடித்தது என்று இங்கே கூறுகிறார். ஒரு 'புதிய சலுகை'யைக் கொடுத்ததாம் வைதிக மதம்.

அதென்ன **புதிய சலுகை** ?

அது 'முக்தி' !!!

முக்தி என்பது புதிய சலுகையா ?

**திருக்குறளை மறந்து விட்டாரா வைரமுத்து ?**

திருக்குறள் முதல் அதிகாரம் முக்தியைப் பற்றித்தானே சொல்கின்றது ?

கடவுளின் குணங்கள் ஆறு. அதனால் தான் அவன் 'பகவன்' என்று அழைக்கப்படுகிறான். அந்த பகவானை முன்னிட்டு இருக்கும் இந்த உலகத்தில் - என்று முதல் குறளில் ஆரம்பிக்கும் திருவள்ளுவர், 10-ஆவது குறளில் அவனது அடியை சரணடைந்தால்தான், பிறவிக் கடலைக் கடக்க

முடியும் - அதாவது முக்தி பெற முடியும் என்று சொல்லி விட்டாரே. சமூகத்தில் வேரூன்றி இருந்தால்தான் இப்படிப்பட்ட கருத்தைத் திருவள்ளுவர் கூறியிருக்க முடியும். இதுகூட தெரியவில்லையா வைரமுத்துவுக்கு ?

இது புதிய சலுகை இல்லை, இதுதான் வைதிக மதத்தின் கொள்கையே.

**சறுக்கல் 7: சாதிப் பேச்சு**

> ***'இழிகுலத்தவர்களேனும் எம்மடியார்கள் ஆகின் தொழுமின் கொடுமின் கொள்மின்' -என்று தொண்டரடிப் பொடியாழ்வார் சாதிபேதம் ஒழிந்ததென்று சங்கூதினார்.***
>
> ***வர்க்கபேதம் ஒழியாமல் சாதிபேதம் ஒழியாது என்ற பிற்காலப் பேரறிவை அவர்கள் அக்காலத்தில் பெற்றிருக்கவில்லை. இறைவன் முன் எல்லாரும் சமம் என்னும் குறுகிய பரவசம் ஒன்றே அவர்களைக் கூட்டுவித்தது; கொண்டு செலுத்தியது.***

வர்க்க பேதம்- சாதிய அடுக்குகள் என்று கூறுகிறாரே, தொல்காப்பியம், புறத்திணை இயல் 74-இல். **'அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்'** என்று ஆரம்பித்து ஏழு வகையான பிரிவுகளைத் தொல்காப்பியர் கொடுத்துள்ளாரே, அதற்கு வைரமுத்து என்ன சொல்கிறார் ?

எந்த மதம் கெட்டிப்படுத்தியது என்று தொல்காப்பியர் அவற்றைக் கொடுத்துள்ளார் ?

அவை என்றென்றும் இருந்தன, எல்லாரது அங்கீகாரத்துடனும் இருந்தன என்று பொருள் கொள்ளும் வகையில் **'என்மனார் புலவர்'** என்கிறாரே தொல்காப்பியர், அறிவில்லாமலா அவர்கள் அவ்வாறு செய்தார்கள் ?

தொல்காப்பியர் சொன்னதை ஆராய்ந்துவிட்டு வைரமுத்து பதில் சொல்லட்டும்.

அடுத்து தொண்டரடிப்பொடியாழ்வாரை மேற்கோளிடுகிறார். இறைவன் முன் அனைவரும் சமம் என்னும் **'குறுகிய பரவசம்'** அவர்களைக் கூட்டுவித்தது என்று சொல்கிறார் வைரமுத்து.

**இறைவன் முன் அனைவரும் சமம் என்று சொல்லவில்லை.**

**இறைவனைத் தொழுவதால் அனைவரும் சமம்** என்று சொல்லியிருக்கிறார்கள்.

இறைவனுக்கு முன் ஏன் அனைவரும் சமமில்லை? அதற்கு விடை, திருக்குறள் 'ஊழ்' அதிகாரத்தில் உள்ளது. **'ஊழிற் பெருவலி யாவுள'** என்று கேட்கிறார் திருவள்ளுவர். ஒருவர் செய்த ஊழ்வினையே வலிமையானது. அதைத் தகர்க்க அந்த ஊழாலேயே முடியாது என்கிறார் .

இதன் காரணமாக அனைவரும் சமமில்லாமல் இருக்கும் நிலை ஏற்படுகிறது.

அதைத் தகர்க்க வழி சொல்வது வைதிக மதம், அந்த மதக் கருத்தை உள்ளுணர்ந்தவர்கள் ஆழ்வார்கள். அந்த வகையில் ஆழ்வார் சொல்கிறார், இறைவனைத் தொழுங்கள். உங்கள் ஊழ்வினை அழியும், அதன் காரணமாக அனைவரும் சமம்.

இதே கருத்து பத்துப்பாடலின் மதுரைக் காஞ்சியில் **'கழுநீர் கொண்ட'** என்று தொடங்கும் வரிகளில் இருப்பதை வைரமுத்து அறியவில்லையே? அவருடைய **'விரிந்த பரவசத்தில்'** அவற்றைப் படிக்காமல் இருந்து விட்டாரா?

ஆழ்வார்ப் பாடல்களைத்தான் புரிந்து கொள்ளவில்லை, சங்கப் பாடல்களையாவது நன்கு தெரிந்து கொண்டிருக்கலாமே?

**சறுக்கல் 8: கடவுளும், தெய்வமும்**

கடவுள் - தெய்வம் என்பவற்றின் வேறுபாட்டினைச் சொல்கிறார் வைரமுத்து.

**கடவுள் என்றால் யார்?** உள்ளிலிருந்து கடவுபவன் - கடவுள். நம் மனதின் உள்ளிலிருந்து நம்மைச் செலுத்துபவன் என்று பொருள். கடவு என்றால் வழி. கடவுதல் என்றால் செலுத்துதல், வழிபடுத்துதல் என்று பொருள். அவன் உள்ளிலிருந்து கடவுவதால் அவன் கடவுள். வைதிக மதத்தில் அதற்கு ஒரு பெயர் உண்டு. அது **'அந்தர்யாமி'**! எங்கும் இருக்கும் இறைவன் ஒவ்வொருவரது உள்ளத்திலும் இருந்து கொண்டு அவரவரை இயக்குகிறான்.

**தெய்வம் என்பவன் யார்?**

தெய்வம் என்னும் சொல், 'திவ்' என்னும் வடசொல் மூலத்திலிருந்து வந்தது.'திவ்' என்றால் ஒளி என்று அர்த்தம். திவ் என்னும் சொல்லிலிருந்து தேவ்,தேவன் என்னும் சொற்கள் வந்தன. தேவன் என்றால் ஒளியுடையவன், ஒளி வீசிக் கொண்டிருப்பவன் என்று பொருள். தேவன் என்பதே தெய்வம் என்று தமிழில் மருவி வந்திருக்கிறது.

கடவுள் என்பதற்கும் தெய்வம் என்பதற்கும் வித்தியாசம் உள்ளதா என்று கேட்டால் ஆம். இவை இரண்டின் அர்த்தத்திலேயே நாம் அந்த வித்தியாசத்தைப் புரிந்து கொள்ளலாம்.

அதற்கு ஒரு உதாரணத்தைச் சொல்லலாம். நம்மைச் சுற்றி வெளியே எங்கும் காற்று இருக்கிறது. காற்று இல்லாமல் உலகம் இல்லை. அதை

தெய்வத்துடன் ஒப்பிடலாம். அதே காற்று நம்முள் இருந்தால்தான் நாம் உயிருடன் இருப்போம். அதைக் கடவுளுடன் ஒப்பிடலாம். ஆக இரண்டு காற்றும் ஒன்றுதான். ஆனால் அதனுடன் நமக்கிருக்கும் தொடர்ப்பைப் பொறுத்துதான் அவற்றை வேறு வேறாகப் பார்க்கிறோம். **நம்முள் இருப்பவன் கடவுள். எங்கும் இருப்பவன் தெய்வம்.**

எந்த ஒரு செயலைச் செய்ய ஆரம்பிக்கும் முன் கடவுளைத் தியானம் செய்து, இந்த செயல் நன்கு நடைபெற உதவு, என்று கேட்டுக் கொள்கிறோம். அது நம்முள் இருக்கும் கடவுள், நம்மைச் சரியாக வழி நடத்த வேண்டிச் செய்யும் விண்ணப்பம். புலவர்கள் அதன் காரணமாகவே கடவுள் வாழ்த்தைச் சொல்லியே தங்கள் படைப்பைத் துவங்குவார்கள்.

கடவுள் வாழ்த்துச் செய்யுளில், தான் வணங்கும் கடவுளை பூட்டி வைக்கும் வழக்கம் பழந்தமிழ் மரபில் இருந்திருக்கிறது. கடவுள் வாழ்த்தின் முதல் செய்யுளின் முதல் சொல்லின் முதல் சீரில் தானப் பொருத்தம், நக்ஷத்திரப் பொருத்தம் பார்த்து, தான் வணங்கும் கடவுள் அல்லது பாட்டுடைத்தலைவனது பெயரின் முதல் எழுத்தை வைப்பர் என்று சூடாமணி நிகண்டு *(12-31 & 102)* கூறுகிறது. இதன் படி திருவள்ளுவர் தியானித்த கடவுளின் பெயரை அறிய முடியும். (இங்கே காண்க)

எந்த அடிப்படையும் இல்லாமல், மனம் போன போக்கில் கடவுளுக்கும், தெய்வத்துக்கும் இலக்கணம் சொல்லுகிற வைரமுத்துவைப் பார்த்தால் கேட்கத் தோன்றுகிறது

இவருக்கு ஏன் இந்த விஷப் பரீட்சை ?

சினிமாத் தமிழுடனேயே திருப்தி பட்டுக் கொள்ளலாமே.

**சறுக்கல் 9: குதர்க்கமான 'குல மகள்' பேச்சு**

ஆண்டாளின் பிறப்பு குறித்த சந்தேகத்தை எழுப்புகிறார் வைரமுத்து. இதற்கு நாம் முந்தைய பதிப்பில் பதில் சொல்லியிருக்கிறோம்.

இங்கு நாம் கவனிக்க வேண்டியது, இதற்கு முன் சாதி பேதம், வர்க்க பேதம் என்று ஆவேசமாகப் பேசியவர், ஆண்டாள் எந்தக் குலத்தைச் சேர்ந்தவள் என்ற கேள்வியை வைக்கிறாரே, யாருடைய மனதை சாதி பிடித்து ஆட்டுகிறது ? இந்தக் கேள்விக்கும் ஆண்டாள் தமிழை எப்படி ஆண்டாள் என்ற ஆராய்ச்சிக்கும் என்ன சம்பந்தம் ?

**சறுக்கல் 10: வீட்டுப் பொருள், அத்து மீறினாளாம்.**

பெண்ணை வீட்டுப் பொருளாகவும், பூட்டுப் பொருளாகவும் கருதப்பட்ட 8-ஆம் நூற்றாண்டு என்கிறார் வைரமுத்து. அவரது அந்தக்

கருத்தையே தினமணி இதழும் முக்கியச் செய்தியாக பெரிய எழுத்தில் வெளியிட்டுள்ளது.

வைரமுத்துவின் கருத்தில் உள்ள **முரண்பாட்டை**, வைரமுத்துவாவது அல்லது பெரிய எழுத்தில் போடச் செய்த தினமணி **ஆசிரியராவது** கொஞ்சமாவது **யோசித்துப் பார்த்தார்களா ?**

ஆண்டாள் செய்ததோ பாவை நோன்பு. இருள் பிரியாத அதிகாலைப் பொழுதில் வீட்டை விட்டு வெளியே சென்று, தோழிகளைத் திரட்டி, ஆற்றங்கரைக்குச் சென்று நீராடுகிறாள். அன்றைய பெண்கள் வீட்டுப் பொருளாகவும், பூட்டுப் பொருளாகவும் இருந்திருந்தால், இப்படிச் செல்ல முடியுமா என்று ஏன் வைரமுத்துவும், ஆசிரியரும் நினைத்துப் பார்க்கவில்லை ? வைரமுத்து எழுதி இருப்பது சினிமா வசனம் போல இருக்கிறதே தவிர எந்த ஒரு தரவு- சான்றுகளையும் வைத்துக் கொண்டு அவர் எழுதவில்லை. பாவை நோன்பே ஒரு சான்று என்பதும் அவருக்கு புலப்படவில்லை - இவை எதையுமே அவர் உணரவில்லை என்பதே உண்மை.

அடுத்த கேள்வி, **ஆண்டாள் எப்படி ஆக்கமுற்றாள் ?**

சூழ்நிலைதான். அவரவர் வளர்கிற சூழ்நிலையில் பேசப்படும் விஷயங்கள், எண்ணங்கள் ஆகியவையே ஒருவரை உருவாக்குகின்றன. கம்பன் வீட்டுக் கட்டுத் தறியும் கவி பாடும் என்னும்போது, பெரியாழ்வார் வீட்டுப் பெண்ணும் பெருமாள் நினைவில்லாமல் எப்படி வளர்வாள் ?

அடுத்த அபத்தம், **மரபுகளின் மீதான அத்துமீறல்.**

அத்துமீறியிருந்தால் ஆண்டாளை ஏன் ஆழ்வாராக ஏற்றுக் கொண்டிருப்பார்கள் ? அவள் பாடியது அத்து மீறல் என்றால், அவற்றுக்கு 'வேதமனைத்துக்கும் வித்து' என்னும் அங்கீகாரத்தை எப்படிக் கொடுத்திருப்பார்கள் ?

அவள் மரபுக்குள் பாடவேதான், தான் பாடியதை **'சங்கத் தமிழ் மாலை'** என்று சொல்லியிருக்கிறாள். அதில் சந்தேகமிருந்தால், அவள் பாடிய சங்கத் தமிழை, அது சங்க-மரபு சார்ந்தது அல்ல என்று பகுதி பகுதியாக வைரமுத்து சுட்டிக் காட்டட்டும். இப்படி இழி சொல்லும், பழி சொல்லும், நாலாந்தர சினிமா வசனமும் பேசி, தன் தரம் இவ்வளவுதான் என்று உலகத்துக்குப் பறை சாற்றிக் கொள்ள வேண்டுமா ?

**சறுக்கல் 11: எதிர் வினையாகும் ஆண்டாள் விருப்பம்**

கற்பனை ஒடுகிறது வைரமுத்துவுக்கு - கல்லாக் கற்பனை ! பெரியாழ்வாரைக் கற்காமல் ஆண்டாளைக் கற்க முடியாது. அதனால்தான்

அவள் தெய்வத்தையே மணப்பேன் என்றதை பெரியாழ்வாருக்குக் கிடைத்த எதிர் வினை என்கிறார்.

தன் மகள் தெய்வத்தையே மணப்பேன் என்றால் ஆழ்வார்க்கு எத்துணை உவகை பெருகியிருக்கும் தெரியுமா? எப்படி அது நடக்கும் என்பது மட்டும்தான் அவருக்கு கவலை. இன்றுவரை வைணவர்கள் மற்றும், வைதீகத்தைப் பின்பற்றும் பிற பிரிவினரும் தங்கள் மருமகனாக அந்த விஷ்ணுவே வர வேண்டும் என்று விரும்புபவர்கள். வைணவர் வீட்டுத் திருமணத்தில், மருமகனை விஷ்ணுவாக உருவகப்படுத்தித்தான், மணமேடைக்கு அழைத்து பெண்ணைப் பெற்றவர் கால் அலம்பி வரவழைப்பார்.

இன்றைக்கும் அப்படிப்பட்ட பாவனையில் வைணவர்கள் இருக்க, பெரியாழ்வார் காலத்தில் ஆண்டாள் விருப்பம் எப்படி ஒரு எதிர் வினையாக இருந்திருக்க முடியும்?

மேலும் தங்கள் வீட்டுக் குழந்தைகளுக்குக்கூட நம்பி, பிம்பி என்றெல்லாம் பெயர் வைக்காதீர்கள், நாரணன் நாமத்தையே வையுங்கள் என்று சொன்னவர் பெரியாழ்வார். அந்தப் பத்து பாசுரங்களில், (பெரியாழ்வார் திருமொழி-4-6-4)

" மானிட சாதியில் தோன்றிற்றோர் மானிட சாதியை,

மானிட சாதியின் பேரிட்டால் மறுமைக்கில்லை'

என்று பெரியாழ்வார் கூறுகின்றார். மானிடர்களது பெயரைக் கூட குழந்தைகளுக்கு வைக்கக்கூடாது என்கிறார். அப்படியிருக்க ஒரு மானிடனைத் தன் பெண் மணக்க விரும்பாமல் தெய்வத்தையே மணக்க விரும்பினால், அவர் ஊட்டிய முக்திக் கருத்துக்கு ஆண்டாள் காட்டிய முதல் படி அல்லவா அது?

இதையொட்டியே மானிடனுக்கு வாழ்க்கைப் பட மாட்டேன் என்று அவள் சொன்னது அமைந்திருக்கிறது என்று வைரமுத்து சொல்லியிருந்தால் அது ஆராய்ச்சி.

விடுதலைக் குரல் என்பது, முக்திக்கான விடுதலைக் குரல் என்று வைரமுத்து சொல்லியிருந்தால் அது போற்றப்பட வேண்டிய ஆராய்ச்சியாக இருந்திருக்கும். ஆனால் அவர் சினிமாக் கவிஞர். அவர் சொல்லாடலும் கருத்தாழமும் நிகழ் கால சினிமாவைத் தாண்டி செல்லவேயில்லை என்று தெரிகிறது. அதனை அடுத்த பத்தி அழுத்திச் சொல்கிறது.

**சறுக்கல் 12: பொருந்தாச் சொல்**

வைரமுத்துவின் சினிமாச் சொல்லாடலைக் கவனித்தீர்களா ? முந்தி விரித்தாளாம். எந்தச் சொல்லையும் இடம், பொருள், ஏவல் குறித்துச் சொல்லும் பாங்கினைக் கூட அறியாமல், அல்லது அறிந்தும் விரும்பாமல் இவ்வாறு எழுதியிருக்கிறார் என்பது அவர் கையாளும் தமிழ் நயத்தின் தரத்துக்குச்சான்று இல்லாமல் வேறு என்ன ?

> ***ஆழ்வார்கள் பன்னிருவருள் பதினொருவர் ஆணாழ்வார்கள். இவ்வொருத்தி மட்டுமே பெண்ணாழ்வார். ஆனால் மொழியின் குழைவிலும், தமிழின் அழகிலும், உணர்ச்சியின் நெகிழ்விலும், உரிமையின் தொனியிலும் ஆணாழ்வார்களை விடவும், பெருமானுக்கென்றே <u>முந்தி விரிக்கத்</u> தலைப்பட்டவள் முந்தி நிற்கிறாளே! யாது காரணம்?***

**சறுக்கல் 13: வைரமுத்துவின் இகழ்ச்சிப் பேச்சின் சிகரம்**

> ***வண்டூர் உறையும் பெருமானுக்குக் குருகினங்களைத் தூதுவிடும் நம்மாழ்வாரின் நாயகன் நாயகி பாவத்தில் உண்மையைத் தாண்டி உணர்ச்சி விளையாடவில்லை. திடீரென்று வைணவத்துக்கு மாறியவர் திருநீறு குழைத்துத் திருமண் இட்டுக்கொண்டது போல் உணர்ச்சியின் பிரவாகம் யாப்புக்குள் தடுக்கி விழுகிறது.***

அடாவடியான வார்த்தைகள் - சொன்னவருக்குக் கவிப்பேரரசு என்னும் பட்டமாம். இவருக்குப் பொருத்தமாக முன்றுறை அரையனார் ஒரு பாடல் எழுதியிருக்கிறார்.

" திறத்தும் இறப்பப் பெரியாரைக்

கல்லாத் துணையார்தாம் கைப்பித்தல் சொல்லின்

நிறைந்தார் வளையினாய்! அஃதால் எருக்கு

மறைந்துயானை பாய்ச்சி விடல்."

(பழமொழி 376)

கல்லாதவர் பெரியோரை இகழ்ந்து பேசுதல், எருக்கஞ் செடியில் மறைந்து கொண்டு யானை மீது அம்பு விடுவதை ஒக்கும். இதன் கருத்து 'அறிவுடையாரைக் கல்லார் துன்புறுத்துவாராயின்,அவர் கெட்டொழிதல் உறுதி என்றறிதல் வேண்டும்.'

திருவள்ளுவரும் சொல்லியிருக்கிறார்:

"எரியால் சுடப்படினும் உய்வுண்டாம் உய்யார்

பெரியார்ப் பிழைத்தொழுகு வார்''.

இவர்கள் வாக்கு பொய்யாகுமா ?

**சறுக்கல் 14: வைரமுத்துவின் கேவலக் கண்ணோட்டத்தின் சிகரம்**

கன்னிகழியாதபெண் (ஆண்டாள்) பாலியல்உரையாடல்செய்கிறாளாம். அதற்கு அவர் சான்றாகக் காட்டுவது 'குத்து விளக்கெரிய' பாசுரத்தில்' **நப்பின்னை கொங்கை மேல் வைத்துக் கிடந்த மலர் மார்பா'** என்னும் வரி. இப்படிப் பாடியதன் மூலம் கொடுங்கோடுகளைத் தாண்டினாளாம். அது மட்டுமா ?

இந்த **'சொல் விடுதலை'** ஆண்டாளுக்கு அருளப்பட்டதா அல்லது **அகவெழுச்சி அத்து மீறலா** என்னும் **விஷக் கருத்தை** விதைக்கிறார்.

கேவலக் கண்ணோட்டத்தின் உச்சக் கட்டத்தை இந்த வரிகளில் வைரமுத்து தொடுகிறார்.

இவற்றைப் படித்து விட்டு **அதிர்ச்சி அடைந்தேன்.**

ஏன் ? ஆண்டாளை இப்படிச் சொல்லிவிட்டாரே என்றா ?

இல்லையில்லை.

**தான் சங்கத் தமிழ் அறியாத பெரும் அறிவிலி** என்பதை, வைரமுத்து இந்த அளவுக்குத் தானே பறை சாற்றிக் கொள்வார் என்று நான் சிறிதும் எதிர்பார்க்கவில்லை.

சங்கத் தமிழில் முல்லைக் கலி பாட்டெழுதத் தெரிந்திருந்தால் தன்னுடைய **தமிழ் அறிவு சூனியத்தை** இந்த அளவு பறை சாற்றிக் கொண்டிருக்க மாட்டார். தன் கண்ணோட்டம் காமக் கண்ணோட்டம்தான் என்பதைத்தான் கட்டுரை முழுவதும் நிரூபித்து வருகிறாரே.

விஷயத்துக்கு வருவோம்.

அந்தப் பாடலை எழுதிய ஆண்டாள் கன்னி பெண். அவள் பாடிய சங்கப் பாடல்களின் பின்னணி ஆயர்பாடி. அவளும் அவள் தோழியரும் ஆயர் குலப் பெண்கள். இதனால் அவள் பாடல்களில் முல்லை நிலக் கரு, உரிப் பொருள்களை பார்க்கிறோம்.

**சோழன் நல்லுருத்திரன் பாடிய முல்லைக் கலியில் கன்னிப் பெண்கள் ஆடும் குரவைக் கூத்து** சொல்லப்படுகிறது. அந்தக் கூத்தில் அவர்கள் பாடும் பாடல் வரிகளையும் காணலாம்.

அவர்கள் என்ன சொல்கிறார்கள் ?

"எளியவோ ஆய் மகள் தோள் ?

விலை வேண்டார் , எம் -இனத்து ஆயர் மகளிர்

கொலை ஏற்றுக் கோட்டிடைத்-தாம் வீழ்வார்

**மார்பின் முலை இடைப் போலப் புகின்,**

ஆங்கு குரவை தழீ யாம் , மரபுளி பாடி " **(கலித் தொகை 103 )**

**இதன் பொருள்:**

'எம் இனத்து ஆயர் **முலை விலை** வேண்ட மாட்டார்கள். ஆனால், **கொல்லேற்றுக்கொம்பிடையிலே,காதலிக்கும்பெண்கள் முலையிடைப் போலக் கருதி** ஆர்வமுடன் வீழ்ந்து தழுவினால், அவனையே தம் மகட்கேற்றவனாகக் கருதுவார்கள்.' **(புலியூர்க் கேசிகன் உரை)**

இந்தக் கருத்தைக் கொடுத்தவர்கள் ஆயர் மகளது பெற்றோர். இதைப் பாடியவர்கள் இளம் கன்னிப் பெண்கள்.

இதற்கு என்ன சொல்கிறார் வைரமுத்து ?

**இந்தக் கன்னி பெண்களுக்கு 'சொல் விடுதலை'யும், 'அகவெழுச்சி அத்து மீறலும்' எப்படி உண்டானது என்று கேட்பாரா ?**

இந்தப் பாடல் சங்கப் பலகையில், தமிழ் அறிஞர் முன் பாடப்பட்டு, அவர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. **வைரமுத்துவைப் போல 'இசை நோக்கிக்' 'கூலிக்குச் செய்துண்ணும்' பாடலல்ல.**

இந்தப் பாடல்முடிவில் ஒரு சொல் இருக்கிறது பாருங்கள்.

'மரபுளி பாடி' - அதாவது 'மரபின்படி பாடி' இருக்கிறார்கள்.

இதையே **நம்மாழ்வார்** பெரிய திருவந்தாதியில் (48) **"மென் தோளி காரணமா வெங்கோட்டேறு ஏழுடனே"** என்று அருளிச் செய்திருக்கிறார் ?

ஏன் ?

அவர் ஆயர் மரபு அறிந்தவர். ஆயர் மகள் தோள் பெறுவது எளிதல்ல. கொல்லேறு தழுவி, அதன் கொம்பினைப் பற்றினால்தான் ஆய மகளான நப்பின்னையின் தோளை ஆயர் குலத் திலகமான கண்ணன் தழுவ முடியும் என்பது மரபு. சொல்லும் பொருளின் இடம், கரு, உரி அனைத்தும் அறிந்துதான் அவர் எழுதியிருக்கிறார். ஆண்டாளும் அந்த மரபைப் பின்பற்றியே எழுதியிருக்கிறாள்.

அந்த ஆயர் மரபின் படியே அவர்கள் சொல்லாட்சியின் படியே, திருப்பாவையிலும் ஆண்டாள் எழுதியிருக்கிறாள். அவள் எழுதியது ஆயர் மகளான நப்பின்னையைப் பற்றி.

"செப்பென்ன **மென் முலை** செவ்வாய்ச் சிறுமருங்குல்

**நப்பின்னை** நங்காய் திருவே துயிலெழாய்!"

"கொத்தலர் பூங்குழல் **நப்பின்னை கொங்கை** மேல்

வைத்துக் கிடந்த மலர் மார்பா"

இவை ஆயர் மரபின் படி, அகப் பொருள்பாற்பட்ட, ஆய மகளிரால் சர்வ சாதாரணமாக கையாளப் பட்ட சொற்களே.

**சிச்சுவேஷனுக்குப் பாட்டு எழுதுகிறேன் என்று வைரமுத்து செய்கிறாரே காமச் சொல்லாடல் - அது எந்தப் பாடல் மரபில் வருகிறது என்று அவரால் சொல்ல முடியுமா ?**

ஆனால் ஆண்டாள் பாடிய சங்கத் தமிழுக்கு மரபு உண்டு.

அது வைரமுத்துவுக்குத் தெரியவில்லை என்றால், **குற்றம் அவருடையது.**

இன்னும் ஒரு சான்று தருகிறேன், முல்லைக் கலியிலிருந்து. இதுவும் குரவைக் கூத்தில் கன்னிப் பெண்கள் பாடுவது.

"முலை வேதின் ஒற்றி முயங்கிப் பொதி வேம், கொலையேறு சாடிய புண்ணை" (கலித் தொகை 106)

**இதன் பொருள்:**

' தோழி! எம் காதலனைக் கொலையேறு சாடிக் குத்திச் செய்த புண்களையெல்லாம், முலை வேதினால் ஒற்றி, ஒற்றித், தழுவித் தழுவிப் பொதிவோமடீ நாம்."

ஒருத்தி, இரண்டு பேர் என்று அல்ல, ஆயர் மகள் அனைவருமே இப்படிப்பட்ட பேச்சையும், செய்கையையும் உடையவர்கள் என்று இப்பாடல் காட்டுகிறது.

அன்று **ஆண்டாளும் சங்கத் தமிழ் படித்துதான் எழுதியிருக்கிறாள், நம்மாழ்வாரும், சங்கத் தமிழ் அறிந்துதான் எழுதியிருக்கிறார்** என்பதற்கு முல்லைக் கலியே சான்று.

**அவற்றை அறியாதவர் என்பதற்கு வைரமுத்து சான்று.**

**இதுவரை போதுமா, இன்னும் கொஞ்சம் வேண்டுமா வைரமுத்து அவர்களே ?**

இங்கு இப்பொழுது சொல்லப்போவது **'மரபு மீறல்களைத்' தேடும் மரபறியா வைரமுத்துவுக்கல்ல.**

ஆண்டாள் பாடலில் ஆன்மீகத்தைக் காணும் அன்பர்களுக்கு.

திருப்பாவைத் தனியன்களில் ஒன்று முலையைப் பற்றிப் பேசுகிறது. பட்டர் அருளிய வடமொழித் தனியனான இது **'நீளா துங்க ஸ்தன கிரி..'** என்றுதான் ஆரம்பிக்கிறது. இந்தப் பாடலின் பொருள்,

**"பணைத்தெழுந்த நப்பின்னை கொங்கையெனும் மலைச் சாரலில் கண் வளரும் கண்ணனைத் துயிலுணர்த்தி ... "**

நப்பின்னையைப் பற்றிப் பேசும் இடங்களில் தான் முலைப் பேச்சு வரும், ஒரு காரணம் அவள் ஆய மகள். இன்னொரு காரணம் அவள் நீளா தேவியின் அவதாரம்.

யார் அந்த **நீளா தேவி ?**

அவள் திருமாலின் மூன்று துணைவியரில் ஒருத்தி.

நிலமகள், திருமாலின் ஒரு துணைவி.

நாம் நிற்கும், இந்த நிலமே நிலமகள் என்னும் **பூதேவி.**

**திருமகள்,** திருமாலின் இன்னொரு துணைவி.

நாம் வாழும் இந்த நிலத்தைச் (பூமகள்) சார்ந்து கிடைக்கும், பொன், பொருள், வளி, நீர் போன்ற பலவற்றின் மூலமாக நமக்குக் கிடைக்கும் செல்வமே திருமகள் என்னும் லக்ஷ்மி. அவள் ஒரு துணைவி.

இந்த இருவருக்கும் வரக்கூடிய ஆபத்துகளில் இருந்து காப்பவள் நீளா தேவி,அவள் மூன்றாவது துணைவி.

இந்த பூமியைச் சுற்றி பாதுகாத்து வரும் காந்த சக்தி எனலாம். ஆய மகள் முலை போல் அவளுக்கும் இரு துருவங்களிலும் இரு முலைகள். "நீளா துங்க ஸ்தன கிரி' என்று மலை போன்ற முலைகள் என்று பட்டர் அருளியது ஏன் என்று இப்பொழுது புரிந்திருக்கும்.

"கொலை ஏற்றுக் கோட்டிடைத்-தாம் வீழ்வார்
மார்பின் முலை இடைப் போலப் புகின்"

என்று கலித் தொகை சொல்வது போல மாயோன் என்னும் கரும் தெய்வம் முலைகள் போன்ற இவ்விரு துருவங்களுக்கு இடையேயும்

உலகை அணைத்துக் கொண்டு, '**காஸ்மிக் ரே**' எனப்படும் கதிர்களில் இருந்தும், பிற வகையான தீய கதிர்களில் இருந்தும் நம்மைக் காப்பாற்றுகிறார்.

நீளா என்னும் **துருவக் காந்தம்,** பூமி உண்டானதற்குப் பின்னால் உண்டானது. எனவே அவள் பின்னை ஆகிறாள்.

அவள் இரவில் துருவப் பகுதியில் ஒளி வீசி வயப்படுத்திகிறாள், இரவில் **நப்பின்னையுடன் கருநீலக் கண்ணன் துய்ப்பது போல.**

நப்பின்னையைப் பார்த்தவர் யாரும் இல்லை. நம்மாலும், இந்த நீளா தேவியை, காந்த சக்தியாக கண்ணனையே ஈர்த்தவளைப் பார்க்க முடியாது.

ஏறு தழுவி, ஆயர் மகள் முலை போன்ற அதன் முதுகினை அணைத்தவாறே (நப்பின்னை கொங்கை கை வைத்துக் கிடந்த மலர் மார்பன் ஆண்டாள் கூற்று), வேகமாக ஓடும் எருத்தின் போக்கிலேயே, மாயவனும் அதன் மேல் பயணிக்கிறான்.

வாரம் ஏழு நாட்களும் மாயவன் பூமியை அணைத்து, காந்தத் துருவத்தோடு பயணிக்கும் அந்த காஸ்மிக் கோலமே, அவன் ஏழு ஏறு அடக்கி, நப்பின்னையை மணந்த செயலாக அவதாரத்தில் காட்டினானோ என்று எண்ணத் தோன்றுகிறது.

ஆயர் சேரியில் ஆடும் குரவையையும், நப்பின்னையையும் இணைத்து ஆண்டாள் பாடியிருக்கவேதான், அதை அறிவிலும் அருளிலும் ஜொலிக்கும் ஆச்சார்யப் பெருமக்கள் நளினமாக, நாசுக்காகக் காட்டியிருக்கவே தான், இன்றைய அறிவியலின் துணை கொண்டு, பிரபஞ்சம் சார்ந்த நம் வைதிக மதத்தின் வீச்சினை அறிந்து கொள்ள முடிகிறது.

**வைரமுத்து அவர்களே,** இனி உங்களது அடுத்த சறுக்கல் என்ன என்று தெரிந்து கொள்ள வாருங்கள்.

**சறுக்கல் 15: திமிர் காட்டும் உரைகாரர்கள்**

இப்பொழுது வருகிறது அடுத்த சறுக்கல்

"உரைகாரர்கள் இதற்கு வேறு பொருள் கூட்டித்தம் தீராப்புலைமையின் திமிர் காட்டுவார்கள்"

உரைகாரர்களை இவர்கள் என்றைக்குத்தான் மதித்திருக்கிறார்கள் ? சங்க நூல்களுக்கு உரை எழுதிய உரைகார்களையே இவர்கள் மதிப்பதில்லை. வைணவ உரைகாரர்கள் சொல்வதையா எடுத்துக் கொள்வார்கள் ? அதைச் சொல்வதிலும், யார் திமிர் காட்டுகிறார்கள் ?

உதாரணத்துக்கு, **"யாதும் ஊரே, யாவரும் கேளிர்"** என்னும் தொடரை எடுத்துக் கொள்வோம். இந்த ஒரு வரியை மட்டும் மேற்கோளிட்டு, இதுவே பண்டைய தமிழனின் நாகரீகம் என்பார்கள். ஆனால் இந்த வரிகள் எழுதப் பட்ட இடம், பொருள் வேறு. இவை கர்ம வினையின் பாற்பட்டு, ஊழின் கண் அடித்துச் செல்லப்படும் வாழக்கை நிலையைப் புரிந்து கொண்டமையால் ஏற்பட்ட தெளிவின் வெளிப்பாடு.

மற்றவர் யாரும், நம்முடைய இன்ப துன்பங்களுக்குக் காரணமாகாது, நாமே நம் நிலைக்கு காரணம் ஆகையால், எல்லாரும் நமக்கு ஒன்றுதான். அதனால், 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னும் தத்துவக் கருத்து கொண்டது இப்புறப் பாடல்.

இதில் இருப்பது முழுக்க முழுக்க **வேதாந்தக் கருத்து என்பதை இருட்டடிப்பு செய்து விட்டு**, தங்கள் வசதிக்கேற்றாற்போல அந்த வரியை மட்டும் உபயோகித்துக் கொள்கிறார்கள் .

இதைப் போன்ற இன்னொரு வரி திருக்குறளில் வரும் 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்.." என்பதாகும்.

முன்வினைப்படி பிறக்கிறோம் என்பதில் மட்டும் தான் ஒற்றுமையே தவிர, வினைப்பயனால் அல்லது செய்யும் செயலால் வேற்றுமை இருக்கிறது என்னும் இன்னொரு **வேதாந்தக் கருத்தைக்** கூறுகிறார்கள் உரைகாரர்கள். இதை எவ்வளவு தூரம் மக்களிடையே கொண்டு சென்றிருக்கிறார்கள் ? **தமிழர் மதம், இந்து மதமே இல்லை என்பதுதானே இவர்கள் பரப்பும் கருத்து ?**

இந்த 'பிறப்பொக்கும்' குறளையும், யாதும் ஊரே செய்யுளையும், வைரமுத்துவுக்கு ஆசானான கருணாநிதி செம்மொழிப் பாடலில் புனைந்துள்ளார்.

**"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்**
**பிறந்த பின்னர் யாதும் ஊரே, யாவரும் கேளிர்"**

இதைப் படிப்பவர்களுக்கு இப்பொழுது புரிந்திருக்கும், பொருளை உருமாற்றி ஜாலம் செய்வதில் எவ்வளவு தேர்ச்சி பெற்றவர்கள் என்று !

**சறுக்கல் 16:வெட்கமறுத்த மொழி தமிழ் – சொல்வது வைரமுத்து**

**கனவுத் திறம் உரைத்தல்** என்பதே இன்பத்துப் பாலின் ஒரு இலக்கணமாக திருக்குறள் சொல்கையில், வைரமுத்து பயன்படுத்தும் சொல்லாடலைப் பாருங்கள். உடனே அடுத்த வரியில், உயர்த்திச் சொல்வது போல ஒரு பாவனை.

இன்னும் சொல்கிறார், தமிழ் **வெட்கமறுத்து விளையாடுகிறதாம்.**

யாரை விமரிக்கிறார் ?

ஆண்டாளையா ? தமிழையா ?

**இவருக்கு முன்னால் ஒருவர் தமிழைக் காட்டுமிராண்டி மொழி என்றார்.**

இவரோ, **தமிழ் வெட்கமறுத்த மொழி** என்கிறார். இதற்குக் கைதட்டி வக்காலத்து வாங்கும் கூட்டத்துக்குத் தெரியுமா இவர், தமிழையும் சேர்த்துத்தான் இழிவு படுத்துகிறார் என்று ?

**சறுக்கல் 17:கன்னிக் குரல் என்னும் வஞ்சகப் பேச்சு**

இதற்குப் பின் வரும் அனைத்துமே சறுக்கல்தான். வெள்ளிவீதியார் பற்றியும், பெருமாள்முன் ஆண்டாள் மறைந்ததும் பற்றி முந்தின கட்டுரையில் எழுதினோம். வைரமுத்து மேற்கோள் காட்டின ஆராய்ச்சிக்கு கட்டுரைகளின் ஏற்புடைமையை உலகமே உரித்துக் கட்டி விட்டது. இந்தப் பகுதியில் விட்டுப் போன அடாவடிப் பேச்சு ஒன்று இருக்கிறது.

ஒரு கன்னிப் பெண் இப்படியெல்லாம் பேசலாமா என்று நைச்சியமாக ஒரு வரியில் இடைச் செருகல் செய்துள்ளார். இதைப் பற்றி சறுக்கல்-14 -இல் விரிவாக அலசினோம். மேலும் கொஞ்சம் விளக்குவோம்.

சங்கத் தமிழ் அகப்பொருளின்படி, முல்லை நில ஆய்ச்சியர் பெண், அதிலும் கன்னிப் பெண் இப்படிப் பேசுவதை சங்கத் தமிழில் காண்கிறோம். அந்தக் கன்னிப் பெண் தான் யாரை மணக்க விரும்புகிறாளோ அவரைப் பற்றி இப்படி பேசுவாள். முல்லைக் கலியில், ஆற்றங்கரையிலே, சிற்றில் புனைந்து, வரப்போகும் கணவனது படிமத்தை மணலில் வடித்து, அவனையே கணவன் என்று மனதில் வரித்தவளுக்கு அதுவே 'பெருமணம்'. அதன்றி, அந்த வீட்டார் வேறு வரன் பார்த்தால், அது இரண்டாவது மணம் போன்றது.

ஆயர் குலப் பெண் கூறுகிறாள், (கலித்தொகை-114)

" அருநெறி ஆயர் மகளிர்க்கு

இருமணம் கூடுதல் இல் இயல்பன்றே ? "

இதைச் சொன்னவள் கன்னிப் பெண். ஆண்டாளும் ஆயர்பாடிப் பெண்ணாகத்தான், சங்க கால ஆயர் மகள் போலவே பாடியிருக்கிறாள் என்பதை அறியாதவர் வைரமுத்து என்று சுய தம்பட்டம் அடித்துள்ளார் இந்தக் கட்டுரையில்.

**சறுக்கல் 18: இல்லாத ஆதாரத்தை வெளியிட்டமை**

அமெரிக்காவின் இண்டியானா பல்கலைக்கழகம் பற்றி குறிப்பு வஞ்சப் பேச்சு பேசுவதற்காகவே வைரமுத்து தேடித்திரட்டின ஆதாரங்கள். அவை பல்லை இளித்து விட்டன. அவற்றை இன்னும் பார்க்காதவர்கள் இங்கே பார்த்து, வைரமுத்துவைப் பற்றி பெருமை கொள்ளலாம்.

வெளியிடாத பல்கலைக்கழகம்

ஆதாரம் காட்டாத கட்டுரை

(பார்க்க :https://www.youtube.com/watch?v=I5jEWY_fACw&feature=youtu.be மற்றும் https://twitter.com/Ramkaashyap/status/952772990348873728?s=08)

**முடிவாக .....**

**மரபு மீறலைச் செய்தவர் வைரமுத்து.**

என்ன மரபு மீறல் என்கிறீர்களா ?

ஒரு கவிஞனோ, அல்லது ஒரு கட்டுரை ஆசிரியரோ, தான் எழுதப் புகும் பாட்டுடைத் தலைவன், அல்லது கட்டுரை நாயகனை, தன் கவிதை அல்லது கட்டுரையில் உயர்த்திச் சொல்லுவான். இல்லாத நல்ல விஷயங்களையும் இருப்பதாகக் கூட்டிச் சொல்லுவான். அதுதான் எழுதும் மரபு.

ஆனால் தமிழை ஆண்ட ஆண்டாள் என்று அவளை உயர்த்திச் சொன்னேன் என்று கூறிக் கொள்ளும் வைரமுத்து என்ன செய்துள்ளார் ?

முழுக்க முழுக்க ஆண்டாளை, அவள் பாடிய தமிழைக் கேவலப்படுத்தி எழுதியுள்ளார்.

அவர் சொல்லிக் கொள்ளலாம், தான் உயர்த்திச் சொன்னதாக.

மொத்த கட்டுரையிலும் **ஏதேனும் ஒரு வரியை அவர் காட்டட்டும் - இது ஆண்டாளை உயர்த்திச் சொன்னது என்று.** அப்படி ஒரு வரி கூட காணக் கிடைக்கவில்லை என்பதுதான் உண்மை.

அந்த உண்மை ஒரு கேள்வியை எழுப்புகிறது - **எதற்காக இப்படி ஒரு கட்டுரையை ஆண்டாளின் மீது அவர் எழுதியுள்ளார் ?**

**இரண்டே காரணங்கள்தான்** தெரிகின்றன.

ஒன்று, நாம் இதுவரை விளக்கினாற்போல, **அவருக்குப் பழந்தமிழும், சங்கத் தமிழும் தெரிந்திருக்கவில்லை.** நிகழ்கால சினிமா தமிழைத் தாண்டி அது காட்டும் கண்ணோட்டத்தைத் தாண்டி அவரால் பழந்தமிழ்நாட்டுப் பண்பாட்டுக்குச் செல்ல இயலவில்லை.

இரண்டு, இவர் **அறம், பொருள், இன்பம்** என்று வைதிக மதத்தின் முப்பொருளைப் பற்றிப் பேசும் **திருவள்ளுவர் வழி நடப்பவரல்ல.**

திருவள்ளுவர் தன் முதல் குறளில் கடவுளை வணங்கி விட்டு இரண்டாவது குறளில் சொல்கிறார்,

**'கற்றதனா லாய பயனென் கொல் வாலறிவன்**
**நற்றாள் தொழாஅர் எனின்.'**

கல்வி கற்பதன் பயன் என்னவென்றால், அந்தக் கடவுளின் திருவடிகளைத் தொழுவதே ஆகும்.

தான் கற்ற கல்வியைக் கொண்டு பரமன் திருவடியில் பாசுரங்ககளைக் கொட்டி, அந்தப் பரந்தாமனது திருவடிகளிலேயே ஐக்கியமானாள் ஆண்டாள்.

ஆனால் அவள் பாடலில், அவள் பிறப்பில், அவள் வாழ்ந்த விதத்தில், அவள் இறைவனோடு ஒன்றியதில் என்று எல்லா விதத்திலும் அவளைக் காமக் கண்ணோட்டத்துடன் பார்த்து, பத்திக்குப் பத்தி, இடைச்செருகலாக, அவளையும், அவள் பக்தியையும், அவள் பின்பற்றிய வைதிக மதத்தையும், அந்த மதத்தைச் சார்ந்த ஆச்சார்யர்களையும் மட்டம் தட்டி, விஷ வித்துக்களைப் படிப்பவர் மனத்தில் விதைத்திருக்கிறாரே - அது

இவருக்கு வைதிக மதத்தின் மீது - அது காட்டும் தெய்வத்தின் மீது சிறிதும் நம்பிக்கையில்லை என்பதையே காட்டுகிறது.

அதாவது வள்ளுவன் வாக்கின்படி நற்றாள் தொழாதவர் என்பதைக் காட்டுகிறது. அந்த வைதிக மதத்தின் மீது ஒரு காழ்ப்புணர்ச்சி இருக்கிறது என்பதைப் பட்டவர்த்தனமாகக் காட்டுகிறது.

இப்படிப்பட்ட கட்டுரைக்கு **நாம் சொல்லும் முடிவுரைதான் என்ன ?**

இந்தத் தருணத்தில் எனக்கு **'சோ'** அவர்கள்தான் நினைவுக்கு வருகிறார். வெகு நாட்களுக்கு முன் வைரமுத்துவின் கட்டுரையைப் போலவே, கவிதை வில்லங்கம் ஒன்று நடந்து கொண்டிருந்தது. **கவிஞர் சுரதா** அவர்கள் ஒரு வாரப் பத்திரிகையில் தொடர்ந்து கவிதை எழுதி வந்தார். சகிக்க முடியாத அந்தக் கவிதைகளை சோ அவர்கள் விமரிசனம் செய்தார். உடனே நான்கு பேர் சுரதாவுக்காக வரிந்து கட்டிக் கொண்டு, சோவை எதிர்த்துப் பேசினர்.

சோ அவர்களுக்குப் பதில் அளித்தார் -

**'நாலு பேருக்கு நன்றி'**. நாலு பேர் எதற்கு வருவார்கள். அதற்குத் தான் வந்திருக்கிறீர்கள். அதனால் 'நாலு பேருக்கு நன்றி'

என்று கூறினார்.

வைரமுத்துவின் வைரம் (பகை, வெறுப்பு) முற்றின கட்டுரைக்கும் நாலு பேர் வந்தார்கள்.

மீதி சில பேர் மேளம் இசைத்தார்கள்.

சோ சொன்னது சரிதான்.

நாலு பேர் வந்து மேளமும் கொட்டியாச்சு.

இனி என்ன ?

பட்டங்களுக்கும், கொட்டங்களுக்கும் என்ன மரியாதையோ அதை அவர்களே கொடுத்துவிட்டார்கள்.

><><><><><><><><><><><><><><><><><><

# 5. ஆண்டாள் நோன்பும், அடாவடிக் கதையும்.

Jayasree Saranathan http://jayasreesaranathan.blogspot.com/2018/01/blog-post.html

Friday, June 29, 2012

குரங்கின் கையில் கிடைத்த பூமாலையைப் போல காமுகன் கையில் கிடைத்த பாமாலையும் சின்னாபின்னமாகி விடும். அதுதான் ஆண்டாளது உயரிய பாடல் ஒன்றுக்கு நிகழ்ந்திருக்கிறது. பாவை நோன்பை முடித்த கையோடு, அனங்கனைத்தொழுது வேண்டிக் கொண்ட ஆண்டாள், நாச்சியார் திருமொழியின் முதல் பத்தின்எட்டாவது பாசுரத்தில் **"மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன் கண்டாய்மன்மதனே"** என்று, மனிதனை மணம் புரிய மாட்டேன், மணந்தால் பார்க்கடல்வண்ணனான பரந்தாமனைத்தான் மணம் புரிவேன் என்று சொன்னாலும் சொன்னாள்,முற்போக்கு எழுத்தாளர் ஒருவருக்கு சிந்தனைக் கடல் பொங்கி விட்டது. ஆண்டாள்ஏன் அப்படி எழுதினாள் என்று ஆராய்ந்தார். அந்த ஆராய்ச்சிக்கு எந்த ஆதாரத்தையோ அல்லது சரித்திரச் சான்றுகளையோ அவர் தேடவில்லை. மாறாக, காமக்கண்ணோட்டத்தில் ஒரு கதையைப் பின்னினார். அதை ஆண்டாள் கதையின் மறுவாசிப்பு என்றும் சொல்லிக் கொண்டார். அந்த வாசிப்பைப் பல்கலைக் கழகமாணவர்களுக்கான பாடப்புத்தகத்திலும் வைத்து விட்டார்கள். இதுவே தற்கால மக்களது தரம்!

நோன்பு என்னும் தலைப்பில் இடம்பெற்ற அந்தச் சிறுகதை மனோன்மணியம்சுந்தரனார் கல்லூரி மாணவர்களுக்கான பாடமாக தமிழ்ப் பாடத் திட்டத்தில்நுழைக்கப்பட்டுள்ளது. நோன்பு என்றாலே எந்தத் தமிழ் ஆர்வலருக்கும் பாவைநோன்புதான் நினைவுக்கு வரும். சங்க கால வழக்கமான அந்த நோன்பைப் பற்றிநமக்கு அதிகம் தெரியாது. ஆனால் அதைப் பற்றி நமக்கு ஓரளவேனும் தெரியவருகிறது என்றால் அதற்கு ஆண்டாள்தான் காரணம். இறைவனுக்குகந்த பூமாலைசூடிக் கொடுத்ததோடு மட்டுமல்லாமல், அவள் தொடுத்த பாமாலையின் மூலமாகவும் நோன்பைப்பற்றியும், எப்படி நோன்பிருக்க வேண்டும் என்பதைப் பற்றியும் நமக்குச் சொல்லியிருக்கிறாள். **"நோக்கின்ற நோன்பினைக் குறிக் கொள் கண்டாய்"** என்றுஆண்டாள் சொல்லிவிட்டதால் அதிலிருந்து 'நோன்பு" என்ற தலைப்பை அந்தக்கதாசிரியர் குறித்துக் கொண்டார். ஆனால் அந்த நோன்பை அவள் ஏன்மேற்கொண்டாள் என்று அவள் மீண்டும் மீண்டும் சொல்வதை மட்டும் அவர் ஏற்றுக்கொள்ளவில்லை. காரணம் அவர் பெயரிலும், அவர் பின்பற்றும் கொள்கையிலும்இருக்கிறது.

அவரது பெயர் டேனியல் செல்வராஜ். பழைய தமிழ் இலக்கியங்களை முற்போக்குச்சிந்தனையுடனும், தற்காலத்துக்கு ஏற்றவாறும் எழுதி மக்களிடையே கொண்டு செல்லவேண்டும் என்னும் கொள்கை உடைய கம்யூனிஸ்ட் தலைவர் ஜீவானந்தத்தைப் பின்பற்றுபவர் என்று Frontline கட்டுரை கூறுகிறது. (http://www.hindu.com/fline/fl2416/stories/20070824506012000.htm). அந்தக் கொள்கையை அவர் சார்ந்திருக்கும் சமயக் கதைகளில் வைத்துக் கொள்ளட்டும். எந்த இலக்கியத்தில்பொருந்துமோ, அதில் முற்போக்கைப் புகுத்திக் கொள்ளட்டும். ஆனால் பூமாதேவியேஉருவெடுத்துப் பிறந்தாள் என்று கருதப்படும் ஆண்டாளை தாசிக்குப் பிறந்தவள் என்றும், திருவரங்கப் பெருமானுக்கே மாமனாரான பெரியாழ்வார், கோவிலுக்கு வந்தஅப்சரஸ் போன்ற பெண்களைப் பார்த்ததால் எழுந்த உள்ளத்து அரிப்பையும், உடல்தினவையும் தணித்துக் கொள்ள தாசி வீட்டுக்குச் செல்வதை வாடிக்கையாகக்கொண்டிருந்தவர் என்றும் எழுதுவதா முற்போக்குச் சிந்தனை ?

தெய்வத்தின் மீது கொண்ட காதலால் மனிதனை மணக்க ஆண்டாள் விரும்பவில்லை.ஆனால் இந்த முற்போக்குக் கதாசிரியருக்கு இதெல்லாம் புரியாத விஷயம்.ஆண்டாளுக்கு ஏதோ நெருக்கடி ஏற்பட்டது, அதிலிருந்து தப்பிக்க மனிதனை மணக்க மாட்டேன் என்று சொல்ல வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டதாக அவர் புனைகிறார். இந்தப் புனைதலுக்குப் பின்னணியில் காமத்தைத் தவிர வேறு எதையும் யோசிக்க அவருக்குத் தெரியவில்லை. கற்பனைச் சூழ்நிலைகளைப் புனைவதற்கு எந்தக் கதாசிரியனுக்கும் உரிமை உண்டு. ஆனால் அவற்றை அவர் கற்பனைக்கதாபாத்திரங்களைக் கொண்டு புனைந்திருந்தால் யாரும் கேள்விகேட்கப்போவதில்லை. ஆனால் உண்மையில் வாழ்ந்து, உன்னத பிறவிகளாக இருந்து,இன்றும் கொண்டாடப்பட்டு வரும் பெரியாழ்வார், ஆண்டாள் போன்றவர்களதுவரலாற்றைத் திரித்து, காமக் கண்ணோட்டத்தில் எழுதுவது ஏற்றுக் கொள்ளத்தக்கதா ?

அதிலும் இந்த இருவரது வாழ்க்கைக் குறிப்புகள் ஏறத்தாழ பத்து மூ லங்களில்இருக்கின்றன. அவையாவன:-

(1) இவர்கள் இருவருமே தங்கள் பாசுரங்களில் காட்டியுள்ள அகச் சான்றுகள்.

(2) 1000 வருடங்களுக்கு முன்பே ராமானுஜர் காலத்தில் கருடவாஹன பண்டிதர்என்பவரால் வடமொழியில் இயற்றப்பட்ட "திவ்யசூரி சரிதம்"

(3) பின்பழகராம் பெருமாள் ஜீயர் எழுதிய 'குரு பரம்பரா பிரபாவம்"

(4) மணவாள மாமுனிகள் இயற்றிய 'உபதேச ரத்ன மாலை'

(5) வேதாந்த தேசிகர் எழுதிய "தேசிகப் பிரபந்தம்"

(6) மூவாயிரப்படி "குரு பரம்பரா பிரபாவம்"

(7) வடமொழியில் இயற்றப்பட்ட "பிரபந்நாம்ருதம்"

(8) கந்தாடையப்பன் எழுதிய "பெரிய திருமுடியடைவு"

(9) திருவரங்கம் பெரிய கோவில் வரலாறு கூறும் "கோயிலொழுகு"

(10) பல ஆசாரியர்கள் வழங்கிய தனியன்கள், வாழித் திருநாமங்கள்.

பெரியாழ்வாரும், ஆண்டாளும் வாழ்ந்த வாழ்க்கையை விவரிக்க, இத்தனை ஆதாரநூல்கள் இருக்க, அவற்றையெல்லாம் ஒதுக்கி, அவை எதிலும் சொல்லப்படாத, யாராலும், கனவிலும் கூட நினைக்க முடியாத பாத்திரப்படைப்பாக செல்வராஜ் எழுதியிருக்கிறாரே, என்ன காரணம்? இந்துமததுவேஷமா? ஆண்டாள் சரித்திரத்தைக்கேட்ட மாத்திரத்திலேயே அவள்பால் மக்கள் ஈர்க்கப்படுவதால், அதைக் கெடுக்க வேண்டும் என்று வேண்டுமென்றே செய்யப்படும் மத மாற்ற மூளைச் சலவை முயற்சியா? அல்லது அவரது மன அழுக்கின் வெளிப்பாடா? அப்படி எழுதியதன் மூலம் பெரியாழ்வாரையும், ஆண்டாளையும் மட்டும் செல்வராஜ் இழிவு படுத்தவில்லை. 'பார் முழுதாண்ட பஞ்சவர் குலமுதல்'வனான **'சீர் கெழு செங்கோல் சீவல்லபன்'** (சித்தன்ன வாயில் கல்வெட்டு) என்னும் பாண்டிய அரசனையும் இழிவு படுத்தியுள்ளார். தமிழர் கலாசாரத்தையும் கேவலப்படுத்தியுள்ளார்.அது மட்டுமல்ல, **தமிழை குறித்து கடுமையாக பெரியார் சொன்னதையும் உண்மை என்றே நிரூபித்துள்ளார்.**

ஆம், இந்தச் சிறுகதையின் மூலம் தமிழ் பற்றி பெரியார் சொன்னதை ஆசிரியர் செல்வராஜ் மெய்ப்பித்துள்ளார். தமிழை இயல் தமிழ், இசைத்தமிழ், நாடகத் தமிழ் என்று சொல்லக் கேள்விப் பட்டிருக்கிறோம். அதைக் கடுமையான வார்த்தைகளாலே நிந்தித்தவர் பெரியார். பெரியார், தமிழைக் குறை சொல்லவில்லை. பேசுபவனால், ஒரு மொழிக்கு உயர்வும், அல்லது தாழ்வும் கிடைக்கிறது என்பதைஅவரது பேச்சு காட்டுகிறது.

அதைத் தான் நாம் இயல், இசை, நாடகத் தமிழின் மூலம் காண்கிறோம். உன்னத விவரங்களைக் கொடுக்கும் போது, அதைக் கொடுக்க உதவும் மொழியும் உயர்வுபெறுகிறது. அந்த மொழிக்கு சக்தி கூடுகிறது. அதை உறுதிபடுத்தியே ஆண்டாளும், ஏனைய ஆழ்வார்களும், ஒவ்வொரு பாடல் தொகுப்பின் முடிவிலும், அந்தத் தமிழ்ப் பாடல்களைப் பாடுவதால் இன்னின்ன பலன்கள் உண்டாகும் என்று

சொல்லியுள்ளார்கள். உதாரணமாக, மானிடருடன் வாழகில்லேன் என்று ஆண்டாள் கூறும் நாச்சியார் திருமொழியின் முதல் பத்தை **"விருப்புடை இன் தமிழ்மாலைவல்லார் விண்ணவர் கோன் அடி நண்ணுவாரே"** என்று முடிக்கிறாள். அதாவது இனிய தமிழில் மாலை போல் கோர்க்கப்பட்ட அந்தப் பத்துப் பாடல்களைப் பாடுபவர்கள் விண்ணிலுள்ள தேவர்களுக்கெல்லாம் அரசனான பரந்தாமனது அருகாமையை அடைவார்கள் என்கிறாள். தமிழால் இறைவனை அடைய முடியும் என்பதையும், பக்தியை ஊட்ட முடியும் என்பதையும் இந்த வரிகள் காட்டுகின்றன. ஆண்டாளது மறக்க முடியாத மற்றொரு பாடல் தொகுப்பு, **'வாரணமாயிரம்'** என்று தொடங்கும் இறைவனை மணம் செய்து கொண்ட கனவுப் பாடலாகும். அவற்றை முடிக்கும் போது **"கோதை சொல் தூய தமிழ் மாலை ஈரைந்தும் வல்லவர் வாயுநன் மக்களைப் பெற்றுமகிழ்வரே"** என்கிறாள். குழந்தைச் செல்வத்தை ஈட்டித்தரும் வல்லமையைத் தமிழ்பெறும் வண்ணம் ஆண்டாள் இயற்றியிருக்கிறாள். அந்தத் தமிழே மருந்தாகும் வண்ணம் **"கோதை சொல் மருந்தாம்"** என்று நாச்சியார் திருமொழியை முடிக்கிறாள். தான் இயற்றிய சொல்லால் தமிழை மருந்தாக்கினாள்.

பேசுபவரது குணத்தால், எண்ணத்தால், சொல்லப்படும் சொற்களால் மொழி உயர்வோ தாழ்வோ அடைகிறது என்று பெரியார் கூறியதற்கொப்பாகவே, தங்கள் எண்ணத்தால், பக்தியால், **இன் தமிழிலும், தீந்தமிழிலும் இன்ன பிறவாக உயர்வாகச் சொல்லப்பட்டதமிழிலும், ஆழ்வார்கள் அளித்த சமயத் தமிழால், தமிழும் உயர்வு பெற்றது.** அதைப்பாடினவர்களும் உயர்வு பெற்றார்கள்; வருங்காலத்தில் அவற்றைப்பாடுபவர்களும் உயர்வு பெறப்போகிறார்கள் என்பதை ஒவ்வொரு பத்து பாடல்கள் முடிவிலும் ஆழ்வார்கள் சொல்லியுள்ளார்கள். அப்படிப்பட்ட உயர் தமிழ்ப் பாடல்களை ஒன்றியும், ஊன்றியும் படிக்காததால், செல்வராஜ் கொடுத்த சிறுகதை தமிழுக்கு ஒரு புண்கலனாக அமைந்துள்ளதே தவிர பொன்கலனாக அல்ல. அவர்எழுதிய தமிழைப் படிக்கவும் நா கூசுகிறது. **பெரியார் சொன்ன தமிழ்** எப்படி இருக்கும் என்பதை அவர் நன்றாகவே காட்டி விட்டார்.

தமிழைத்தான் இழிவு படுத்தினார் என்பது மட்டுமல்ல, ஆண்டாள் காலக்கட்டத்துக்கு ஒவ்வாத காட்சிகளையும், ஆண்டாள், பெரியாழ்வார், பாண்டிய மன்னன் ஸ்ரீவல்லபன்ஆகியோரது குணநலன்களையும், வரலாற்று நிகழ்வுகளையும் திரித்து, பொருந்தாதவகையில், அபத்தக் களஞ்சியமாக சித்தரித்துள்ளார். அவற்றை ஒவ்வொன்றாகப்பார்ப்போம்.

1. ஸ்ரீவில்லிபுத்தூரில் பௌர்ணமி நாளிரவில் கதை நடக்கிறது. பொழுது விடிந்தால்தேர்த் திருவிழாவாம். அந்தத் திருவிழாவைப் பற்றின இன்ப நினைவில் மக்கள்எல்லோரும் உறங்கிக் கொண்டிருக்கிறார்களாம். தேர்த் திருவிழாவுக்குஸ்ரீவில்லிபுத்தூர் பெயர் போனது என்பது உண்மை. அது இந்தக் கதாசிரியருக்குத்தெரிந்திருக்கிறது. ஆனால் அந்தத் தேர்த் திருவிழா என்று, எதற்காகக்கொண்டாடப்படுகிறது என்பதை அவர் அறியாமல், கதை எழுத வந்துவிட்டார். தேர்த்திருவிழா ஆரம்பித்ததே ஆண்டாள் வைபவம் நிகழ்ந்த பிறகுதான். இறைவனை அவள்மணந்த அதிசய நிகழ்ச்சிக்குப் பிறகுதான் ஆண்டாள் கோவில் கட்டப்பட்டு, அவள்பிறந்த ஆடி மாதம், பூர நட்சத்திரத்தன்று தேர்த் திருவிழா கொண்டாடும்வழக்கம்ஏற்பட்டது. அந்த ஆடிப்பூரமும், பௌர்ணமியன்றோ, அதற்கு மறுதினமோ வராது.

2. அந்தப் பௌர்ணமி இரவில் அரசன் அவனது கோட்டையின் உப்பரிகையில்வருகிறானாம். அங்கிருந்து ஸ்ரீவில்லிபுத்தூர் வடபெருங்கோவிலின் உயர்ந்தகோபுரத்தைக் காண்கிறானாம். ஆண்டாள் வாழ்ந்த காலக்கட்டத்தில் கோபுரம்கட்டப்பட்டதா என்பதே சர்ச்சைக்குரியது. அது மட்டுமல்லாமல், ஸ்ரீவில்லிபுத்தூரில்கோட்டையும், அரண்மனையும் இருந்ததற்கான ஆதாரமும் எதுவும் இல்லை. ஸ்ரீவல்லபன் காலத்தில், வாணிபப்போக்குவரத்து கொண்ட இடமாக ஸ்ரீவில்லிபுத்தூர்இருந்திருக்க வேண்டும் என்று எண்ணும் வண்ணம் **'தேசி உய்யவந்தப் பட்டணம்"** என்னும் இடம் அந்தப் பகுதிகளில் இருந்திருக்கிறது. (கல்வெட்டு எண் 269, A.R. No 56 of 1929. ராமநாதபுர மாவட்டம், திருப்பத்தூர் தாலுகா, சிவபுரியில் உள்ளஸ்வயம்ப்ரகாசர் கோவில். திரிபுவனச் சக்கரவர்த்தி ஸ்ரீ வல்லபனது 24 ஆம்ஆட்சியாண்டு) **தேசி உய்யவந்த பட்டணம்** என்னும் பெயரைக் கொண்டு, இது பிறஊர்களிலிருந்து வாணிபம் செய்ய வந்த மக்கள் குடியமர்ந்த இடமாக இருந்திருக்கிறது என்று அறியலாம். 'கேரள சிங்க வளநாட்டி'லிருந்து இங்கு மக்கள் வந்திருக்கிறார்கள். (மேற்படி கல்வெட்டு, ஸ்ரீ வல்லபன் காலம்). பின்னாளில் பாளையக்காரர்கள்பாதுகாப்பில் இந்த இடம் இருந்திருக்கிறது. பொதுவாக வாணிப மையங்களைச் சுற்றி பாளையங்கள் மற்றும் காவல் அமைப்புகள் உருவாக்கப்பட்டுள்ளதை கொங்கு நிலங்களில் காணலாம். ஸ்ரீவில்லிபுத்தூரும், 1750 வரை கொல்லம்கொண்டான்பாளையக்காரர் என்பவர் வசம் இருந்திருக்கிறது என்பதற்கு ஆதாரம் இருக்கிறது.அவர்களது கோட்டை நவாப் தளபதிகள் வசம் சென்றது. இந்த விவரங்கள் மூலம், ஸ்ரீவல்லபன் காலத்தில் அவன் தங்கும் வண்ணம் ஸ்ரீவில்லிபுத்தூரில் அரண்மனை, கோட்டை கொத்தளங்கள் இருந்தனவா என்பது சந்தேகத்துக்குரியது. வெறும்

காவல்படை வீடுகள் தான் இருந்திருக்க வேண்டும். மேலும் அந்த அரசன் மதுரையில்தான் வசித்து வந்தான் என்று ஆழ்வார்கள் சரித்திரத்தைக் கூறும் **குரு பரம்பரை பிரபாவம்** என்னும் நூல் கூறுகிறது. மதுரையிலிருந்து ஸ்ரீவில்லிபுத்தூர் சுமார் 75 கி.மீ தொலைவில் இருக்கிறது. எனவே ஸ்ரீவல்லப அரசன் தன் கோட்டையின் உப்பரிகையிலிருந்து வடபெருங் கோவில் கோபுரத்தைக் கண்டான் என்பது, ஏதோமனதுக்குத் தோன்றினபடி எழுதியதுதான். மொத்தக் கதையுமே தாறுமாறாக மனம்போன போக்கில் எழுதப்பட்டிருக்கிறது. ஆனால் மிக உயர்ந்த உண்மையான பாத்திரங்கள் பெயரில் கதையைப் பின்னியிருப்பதுதான் வேதனைக்குரியது.கண்டனத்துக்குரியது.

3. கதையின் 2 ஆம் பக்கத்திலேயே கதாசிரியர் சொல்லும் தவறான விவரம்,கோவிலை ஒட்டி, கிழக்கு ரத வீதியில், தாசி வீடு இருந்தது என்பது. ஸ்ரீவில்லிபுத்தூர்என்னும் ஊர் **'அன்ன வயல்'**கள் சூழப்பட்டதும், **"நீதியால் நல்ல பத்தர் (பக்தர்)வாழுமூர், நான் மறைகள் ஓதும் ஊர்"** என்று வைணவ ஆசாரியர்களால்வருணிக்கப்பட்டதுமான சிறப்புடைய ஊர். இந்த வருணனை கற்பனை அல்லஎன்பதை ஸ்ரீவில்லிபுத்தூர் கோவிலின் தெற்குச் சுவரில் உள்ள ஒரு கல்வெட்டு மூலம்அறியலாம். (கல்வெட்டு எண் 91. A.R. No 548 of 1926) வீரப் பாண்டியனின் 13 ஆம் ஆட்சி எதிராண்டில், செய்யப்பட்ட நில விற்பனைகளையும், கொடைகளையும் இது தெரிவிக்கிறது. இதில் **ஸ்ரீவில்லிபுத்தூரை மல்லி நாட்டின் 'பிரம்மதேயம்'** என்றுகுறிக்கப்பட்டுள்ளது. பிரம்மதேயம் என்றால், வேதவல்லுனர்களுக்குத் தானமாக அளிக்கப்பட்டது என்று பொருள். அங்கு ஒரு கோவில் இருக்கும். அதைச் சுற்றி வேதவல்லுனர்கள் வாழ்வார்கள். அங்குள்ள எல்லா மக்களுமே அந்தக் கோவிலின் உயர்வுக்கும், வேதம் தழைக்கவும் ஏதேனும் ஒரு கைங்கரியத்தில் ஈடுபட்டிருப்பார்கள். சிறந்த பக்தர்களாகவும் இருப்பார்கள். பிரம்மதேயமாக இருந்த அமைப்பைத்தான் ஆசாரியர்கள் ஸ்ரீவில்லிபுத்தூர் வாழ்த்துப் பாடலில் பிரதிபலித்துள்ளார்கள். அப்படிப்பட்ட ஒரு பிரம்மதேயத்தில் தாசி வீடுகள் இருக்க முடியாது.

4. ஒரு ஊரை, பிரம்ம தேயமாக அரசன் அறிவிப்பான். அந்த அறிவிப்பு ஸ்ரீவில்லிபுத்தூரைப் பொருத்தமட்டில், பெரியாழ்வாரை முன்னிட்டுத்தான் கொடுக்கப்பட்டிருக்க வேண்டும். எந்த அரசனைக் காமாந்தகனாக செல்வராஜ் வர்ணிக்கிறாரோ அந்த அரசனால் கொடுக்கப்பட்டிருக்க வேண்டும். ஏனெனில் ஆரம்பத்தில் பெரியாழ்வார் நந்தவனம் அமைத்து, பூமாலைக் கைங்கரியம் செய்துவந்த சாதாரணராகத்தான் இருந்தார். அவர் ஒரு வேத விற்பன்னர் அல்லர். ஆனால் ஒரிரவில் தெய்வமே அவரது

கனவில் வந்து, மதுரைக்குச் சென்று அரசன் கேட்ட சமயத் தத்துவக் கேள்விக்கு பதில் அளிக்குமாறு சொல்லவே அவர் மதுரைக்குச் சென்று அரசனுக்கு விளக்கம் அளித்தார். திருடனாக இருந்த வால்மீகிக்கு எவ்வாறு திவ்விய ஞானம் பிறந்ததோ, அவ்வாறே ஆழ்வாருக்கும் தெய்வ அனுக்கிரகத்தால் ஞானம் பிறந்தது. அவர் அளித்த விளக்கத்தால் அரசன் உட்பட அனைவரும் தெளிவு பெற்றனர். அவரைப் போற்றி, அவருக்குப் **'பட்டர் பிரான்'** என்னும் பட்டமும் அளித்தனர். அதன் தொடர்ச்சியாக அவர் வாழ்ந்த ஸ்ரீவில்லிபுத்தூரை பிரம்ம தேயமாக, ஸ்ரீ வல்லபப் பாண்டியன் அறிவித்திருக்க வேண்டும். ஏனெனில், பெரியாழ்வாரும், ஆண்டாளும் எழுதின பல பாசுரங்களில் பெரியாழ்வாரைப் **"புதுவை மன்னன்பட்டர்பிரான்"**, என்றும் **"புதுவைக் கோன்"** என்றும், **'புத்தூர்க் கோன்'** என்றும்பலவாறாகச் சொல்லியுள்ளார்கள். கோன், மன்னன் என்னும் சொற்கள் தலைவன்,அரசன் என்று குறிக்கும். இதனால் பட்டர் பிரானாக இவர் பட்டம் பெற்றவுடன், இவர்வாழ்ந்த ஸ்ரீ வில்லிபுத்தூரையும் பிரம்மதேயமாக, அரசன் கொடுத்திருக்க வேண்டும். அதற்கு இவரே தலைவராக இருந்திருக்க வேண்டும். இவர்கள் இருவரும் எழுதினஅனைத்துப் பாசுரத் தொகுப்புகளிலுமே புத்தூர் கோன் என்னும் அடையாளம் அல்லதுபட்டர் என்னும் பெயர் இடம் பெறுவதால், பெரியாழ்வார் பட்டர் பிரான் என்னும்பட்டம் பெற்றபிறகே, வில்லிபுத்தூரும் பிரம்மதேயமாக ஆன பின்பே பெரியாழ்வார்திருமொழியும், திருப்பாவையும், நாச்சியார் திருமொழியும் இயற்றப்பட்டிருக்கவேண்டும் என்று தெரிகிறது. அதற்கேற்றாற் போல **"திருவில் பொலிமா மறைவாணர்புத்தூர்த் திகழ் பட்டர் பிரான்"** (பெ - திரு - 3 - 5 - 10) என்றும், **"திருவிற்பொலி மறைவாணன் பட்டர்பிரான்"** (பெரி - திரு - 4 -1 - 10) என்று பெரியாழ்வாரே சொல்லியுள்ளதால், அந்தஊரின் பிரம்மதேயச் சூழலும், அதன் மகுடம் சூட்டினாற்போல பெரியாழ்வார்விளங்கினதும் புலனாகின்றன. அந்தச் சூழலில் தாசி வீடுகள் இருந்தன என்பதும்,ஆண்டாளுக்குப் பெரியாழ்வாரே தனது தகப்பனார் என்று தெரியாமல் 20 வயது வரைவளர்ந்தாள் என்பதும், அபத்தக் கற்பனைகள்.

5. பௌர்ணமியன்று கதை தொடங்கும் முதல் பத்தியிலேயே, கண்டனத்துக்கிரிய கருத்தைச் சொல்கிறார் கதாசிரியர். வாழையடி வாழையாக ஆண்டவனுக்குத் தங்களை அடிமைப் பொருளாக அர்பணித்துக் கொண்ட தேவதாசி வம்சத்து ஆண்டாள்என்கிறார். இதுவே தவறான கருத்து. ஆனால் இங்கு அடிமை செய்யும் தேவ தாசிஎன்பதை மட்டும் பார்ப்போம். ஏனெனில் இதில் தமிழ்ப் பண்பாடும், கோவில்கலாசாரமும் சம்பந்தப்படுகிறது. இந்தக் கதை, தமிழ் நாட்டுக்

கோவில்களில் தேவதாசிகள் இருந்தனர், அவர்களை மக்களும், மன்னனும் காமக்கிழத்திகளாகப் பார்த்தனர் என்பது போன்ற எண்ணங்களை உருவாக்குகிறது. தமிழகக் கோவில் கலாசாரத்தின் உண்மை நிலவரங்களை மக்கள் அறியவில்லை என்றால், இப்படிப்பட்ட கதைகள் சொல்லும் கருத்துக்களே நிலைத்து விடும். எனவே உண்மை நிலையை நிரூபிக்க வேண்டியது அவசியமாகிறது.

6. இந்து சமயத்தில் அடிமை என்னும் நிலை இருக்கிறது. இதையே தாசன், தாசி என்று இருபாலாருக்கும் சொன்னார்கள். இந்தச் சொற்களுக்கு அடிமை என்றே பொருள். தாசி,தாசன் என்ற சொற்களைப் பக்தர்கள் தங்களைக் குறித்தே சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் யாருக்கு அடிமை என்றால் இறைவனுக்குத்தான் அடிமை. இறைவனுக்கு மட்டுமே அடிமை. மனிதனுக்கு மனிதன் அடிமை என்ற எண்ணமே இந்து மதத்தில் கிடையாது. இந்த அடிமையில் இரண்டு வகை இருந்துவந் திருக்கிறது. ஒன்று ஒரு கோவிலுடன் தன்னை இணைத்துக் கொண்டு, அந்தக்கோவில் இறைவனுக்குத் தன்னை அடிமையாக சாஸனம் செய்து கொண்டு, கோவில் தொண்டுகள் செய்வது. இரண்டாவது தனியாகக் கோவில் பணிகள் என்றில்லாமல், எந்த பணியில் இருந்தாலும், எந்நேரமும், எக்காலமும் இறைவனுக்குத் தான் அடிமை என்னும் எண்ணத்துடன் இருப்பது. இந்த இரண்டு வகைகளுக்குமே இறைவன் தான் எஜமானன். இவர்கள், இறைவனுக்கு மட்டுமே தாங்கள் அடிமை என்று பிரகடனப்படுத்திக் கொண்டார்கள். ஆண்டவனுக்குத் தங்களை அடிமையாக அர்ப்பணித்துக் கொணடவர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள், இருந்திருக்கிறார்கள். பெரியாழ்வாரும், ஆண்டாளும், அன்றைக்கும், இன்றைக்கும் உள்ள பல வைணவ அடியார்களும் இரண்டாவது வகையைச் சேர்ந்தவர்கள். பெரியாழ்வார், "**எந்தை தந்தை தந்தை தந்தைதம் மூத்தப்பன் ஏழ்படிகால் தொடங்கி வந்து வழிவழி ஆட்செய்கின்றோம்**" என்று திருப்பல்லாண்டில் கூறுகிறார். தந்தை, தாத்தா, கொள்ளு தாத்தா, எள்ளு தாத்தா என்று ஏழேழு தலை முறைகளாக இறைவனுக்கு அடியவர்களாக ஆட்பட்டிருக்கிறோம் என்கிறார். அவரைப் போலவே ஆண்டாளும், "**எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னோடு உற்றோமே யாவோம், உனக்கே நாம்ஆட்செய்வோம், மற்றை நம் காமங்கள் மாற்று**" என்று கேட்டுக் கொள்கிறாள்.இவர்களைப் பின்பற்றியே வைணவப் பெரு மக்கள் அனைவரும், இன்றுவரைதங்களை இறைவனுக்கு அடிமை என்று சொல்லிக் கொண்டும், தாசன், தாசி என்று தங்களை அழைத்துக் கொண்டும் இருக்கிறார்கள். தன்னைத் தோழர் என்று அடையாளப்படுத்திக் கொள்ளும் செல்வராஜ்க்குப் புரியும் வழியில்

சொல்வதென்றால், இறைவன் ஒருவனே முதலாளி என்று அன்றைய மக்கள் நினைத்தனர். மற்றவர்களெல்லாம் அவனுக்கு அடிமைகளே. இன்றும் அப்படி நினைப்பவர் பலர் உண்டு. மக்கள் அனைவரும் அவனுக்கு அடிமைகளே. ஏனெனில்அவனன்றி மக்கள் உற்பத்தியே கிடையாது. அவனே படியளப்பவன். அவனே எல்லாமுமாக இருப்பவன். இந்த அறிவைப் பெற்ற பெரியாழ்வாரும், மற்றும் பலரும்,அவனுக்கு அடிமைகளாக இருந்தார்கள்.

7. அந்த அடிமைத்தனத்துக்கு ஒரு சின்னமும் இருக்கிறது. அவனது சின்னத்தைப்பொறித்துக் கொண்டு, அவனுக்கே தாங்கள் ஆட்பட்டவர்கள் என்று சொன்னார்கள். தன்தந்தை, தாத்தா காலத்திலிருந்து இறைவனுக்கு அடிமைப்பட்டோம் என்றும் சொன்னபாடலுக்கு அடுத்த பாட்டில் **"தீயிற் பொலிகின்ற செஞ்சுடர் ஆழி திகழ் திருச்சக்கரத்தின் கோயிற் பொறியாலே ஒற்றுண்டு நின்று குடி குடியாட் செய்கின்றோம்"** என்கிறார் பெரியாழ்வார். அதாவது இறைவனிடம் அடிமை செய்பவர்கள் தாங்கள்என்பதை உறுதி படுத்த, அந்த இறைவனது சங்கு சக்கரப் பொறிகளை தீயில் சுட்டு, அவற்றைக் கொண்டு தங்கள் தோள்களில் அழியாத அடையாளச் சின்னங்களை ஏற்படுத்திக் கொண்டு தாங்கள் அவனுக்கு மட்டுமே சேவகம் செய்பவர்கள் என்று காட்டிக் கொண்டிருக்கின்றனர். இந்த வழக்கம் இன்றும் வைணவத்தைப் பின் பற்றும் மக்களிடையே இருக்கிறது, பெரியாழ்வார் காலத்திலும் இருந்திருக்கிறது.

8. இவர்களைத் தவிர இருந்த மற்றொரு வகை அடிமைகள் தங்களையே கோவிலுக்குத் தானமாகவும், விலைக்கு விற்றுக் கொண்டும் கோவில் அடிமைகளாக இருந்திருக்கின்றனர். இதற்கான ஆதாரங்கள் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. நாகப்பட்டினம் கொறுக்கையில் உள்ள வீரட்டானேஸ்வரர் கோவில் கல்வெட்டின் மூலம், மொத்தம் 100 பேர் தங்கள் குடும்பத்தினர் சகிதமாக இறைவனுக்குஅடிமைகளாக சாசனம் செய்து கொண்டுள்ளனர் என்று தெரிய வந்துள்ளது. திருவிடந்தைப் பெருமாள் கோவிலுக்கு 12 குடும்பங்களைச் சேர்ந்த மீன் பிடிப்பவர்தங்களை அடிமைகளாக அர்ப்பணித்துக் கொண்ட சாஸனம் இருக்கிறது. திருவக்கரைக்கோவில், தஞ்சாவூர் கீழையூர்க் கோவில், திருப்பாம்புரம் கோவில் ஆகியவற்றிலும்அடிமைகளாகத் தங்களை சாஸனம் செய்து கொண்ட ஆதாரங்கள் இருக்கின்றன. இந்த அடிமைகளுக்கும் சூலப்பொறி வைத்த குறிப்புகள் இருக்கின்றன. இதைக் கொண்டு ஏதோ அடிமை வியாபாரம் நடந்தது என்று அதீதக் கற்பனையில் எழுதும் எழுத்தாளர்கள் இருக்கிறார்கள். ஆனால்

பெரியாழ்வார் கூறுவதையும், இன்றும் வைணவ மக்கள் சங்கு சக்கரப் பொறியை தோளில் பொறித்துக் கொள்வதையும் பார்த்தாவது, இறைவனுக்கு ஆட்பட்டு இருத்தலின் அடையாளமாக, சூலப்பொறி இட்டுக்கொள்ளும் வழக்கத்தைப் பின்பற்றியிருக்கிறார்கள் என்று தெரிந்து கொள்ளவேண்டும்.

9. இந்த அடிமை விவகாரத்தின் தொடர்ச்சியாக அந்தச் சிறுகதைத் தொகுப்பின் 10, 11ஆம் பக்கங்களில் இன்னுமொரு மாபெரும் அபத்தம் அரங்கேறுவதைக் காணலாம்.ஆண்டாள் தேவ தாசிக்குப் பிறந்தவளாம். தேவதாசி என்றாலே இந்தக் கதாசிரியர் போன்றவர்களுக்கு காமக் கிழத்திகள் என்று எண்ணம். ஆண்டாள் கோவிலில் தேவதாசியாக நடனம் ஆடுவதைப் பாண்டிய மன்னன் ஸ்ரீவல்லபன் பார்த்தானாம். அதைக் கண்டு அவளை மோகித்து, போகப் பொருளாக எண்ணி அழைத்துவிட்டானாம். அதை ஏற்றுச் செல்லாவிட்டால் மறுநாளே அவர்களுக்குக் கிடைக்கும்மானியத்தை நிறுத்துவிட உத்தரவு பிறக்குமாம். ஆண்டாளும் அவள் தாயும் தெருவில் நாய் போலச் சாக வேண்டி வருமாம். என்ன ஒரு முற்போக்குச் சிந்தனை! ஒருவரையும் பாக்கி வைக்காமல் எல்லோரையும் இழிவு படுத்தி விட்டார் செல்வராஜ். அது மட்டுமல்ல, அந்தக் காலக்கட்டத்தில் கோவிலில் அடிமையாய் சேவகம் செய்தவர்கள் நிலை என்ன, என்ன சேவகம் செய்தார்கள், அவர்களுக்கு என்ன மானியம் கிடைத்தது, அதை அரசன் மனம் போன போக்கில் நிறுத்த முடியுமாஎன்றேல்லாம் ஆராயாமல், நாலாந்தர சினிமா வசனம் எழுதியிருக்கிறார்.

10. கோவிலில் அடிமைகளாகத் தங்களை அர்ப்பணித்துக் கொண்ட பெண்கள் தேவரடியார், பதியிலார், தளியிலார், தளிச்சேரிப் பெண்டுகள் என்னும் பல பெயர்களில் அழைக்கப்பட்டனர். தேவரடியாள் என்னும் பெயர் இன்றைக்கு எந்த பொருளில் சொல்லப்படுகிறது என்பதைச் சொல்லத்தேவையில்லை., ஆனால், ஆண்டாள் காலத்தில் அதாவது **1000** ஆண்டுகளுக்கு முந்தின கல்வெட்டுகளில் அது தெய்வத்துக்குத் தங்களை அடிமைகளாக அர்ப்பணித்துக் கொண்ட ஒரு ஒப்பற்ற நிலையைக் குறித்தது. அந்த நிலையை ஒரு திருத் தொண்டாகச் செய்தனர். **தேவரடியார்கள்** கோவிலில் திருவலகிடல், திருமெழுகிடல், இறைவனுக்கு அமுதுபடைப்பதற்கான அரிசியைத் தூய்மை செய்தல், திருப்பதிகம் பாடுதல், இறைவனுக்குக்கவரி வீசுதல் ஆகியவற்றைச் செய்தனர். விழாக் காலங்களில் திரு நீற்றுத்தட்டையும், மலர்த் தட்டையும் ஏந்தியிருந்தனர்.

11. **தளியிலார்** என்பவர்கள் ஆடல் பாடல்களில் வல்லவர்கள். இவருள் சிவன்கோவிலில் பணி செய்தவர்கள் **'ரிஷபத் தளியிலார்'** என்றும், வைணவக்கோவில்களில் பணி செய்தவர்கள் **"ஸ்ரீ வைஷ்ணவ மாணிக்கம்"** என்றும்அழைக்கப்பட்டனர். பார்ப்பவர்கள் மனம் தறி கெடும் படியும், போகப்பொருளாகவும் இவர்கள் இருந்தனர் என்றால், இப்படியா சிறப்புப் பெயர் பெற்றிருப்பார்கள் ?

12. **பதியிலார்** என்போர் பெரிய கோவில்களில் அதிக எண்ணிக்கையில் இருந்தனர். தஞ்சைப் பெரிய உடையார்க் கோவிலில் நானூற்றுக்கும் மேற்பட்டப் பதியிலார் பணியாற்றி இருக்கின்றனர். அவர்களது வீட்டு எண், தெருப் பெயர் போன்ற விவரங்கள் எல்லாம் கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டுள்ளன. இந்தத் தேவரடியார்களும், பதியிலார்களும் ஒரு வகுப்பைச் சேர்ந்தவர்களில்லை. எல்லா வகுப்புப் பெண்டிரும் தேவரடியார்களாக இருந்திருக்கின்றனர். முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தில் **'ஆச்சப் பிடாரன் கணபதி நம்பி'** என்கிற அழகிய பாண்டியன் பல்லவரையன் என்னும் படைத் தலைவன், பாலாற்றங் கரையிலுள்ள திருவல்லம் கோவிலில் பணிகள்செய்வதற்கு தன் குடும்பப் பெண்களைத் தேவரடியார்களாக ஒப்படைத்தான். அப்பெண்கள் சூலப்பொறி பொறிக்கப்பட்டு, கோவில் பணிகளில் ஈடுபட்டனர் என்று அந்தக் கோவில்கல்வெட்டு தெரிவிக்கிறது. ஆடல் பாடல் என்பதும் கோவில் பணிகளில் ஒன்றாகச்செய்யப்பட்டது. தெய்வத்துக்கே அர்ப்பணித்துக் கொண்ட இவர்கள் விரும்பினால், ஒருவரை மணம் செய்து கொண்டு வாழவும் வசதியளிக்கப்பட்டது. **சதுரன் சதுரி** என்றதேவரடியாள், நாகன் பெருங்காடன் என்பவனை மணந்து கொண்டாள் என்று கூறும் திருவொற்றியூர்க் கல்வெட்டு மூலம் அவர்கள் தெய்வத்துக்கு அடிமைத் தொண்டு செய்தாலும், தங்கள் வாழ்க்கையை எப்படி அமைத்துக் கொள்ளலாம் என்ற சுதந்திரம்இருந்தது என்பதும் தெரிய வருகிறது. செல்வராஜ் போன்றவர்கள் நினைப்பது போல இறைவனுக்கு ஆடலும் பாடலும் சமர்ப்பித்த பெண்கள், போகப் பொருளாகப் பார்க்கப்படவில்லை. மேற்சொன்ன கல்வெட்டுச் செய்திகள் ஆண்டாள் வாழ்ந்த காலக்கட்டத்தை ஒட்டியவை என்பது குறிப்பிடத்தக்கது.

13. செல்வராஜ் கதையில் சொல்வது போல அரசன் மானியத்தை நிறுத்தி, இவர்கள்நாய் போல நடுத்தெருவுக்கு வரும் நிலை அன்று இல்லவே இல்லை. அரசன் தன்மனம் போன போக்கில் மானியம் தரவில்லை, தந்ததைப் பிடுங்கவும் இல்லை. எந்தக்கொடையையும் சாஸனம் செய்து வைத்தார்கள். அதை முறைப்படி கொடுக்கஏற்பாடுகளும் செய்திருந்தார்கள். பெரும்பாலான கொடைகள் நிலமாக இருந்தன.

அவற்றில் கிடைக்கும் விளைச்சலே இவர்களுக்கு வருமானமாகும். தளியிலார், தேவரடியார், தளிச்சேரிப் பெண்டுகள் ஆகியோருக்கு **"பாணக் காணி"** **"நட்டுவக் காணி"**என்னும் பெயரில் நிலங்கள் கொடுக்கப்பட்டன. தமிழ்க் கூத்தாடுபவர்களுக்கு"**கூத்தாட்டிக் காணியும்"**, இசை பாடும் முரலியனுக்கு **"முரலியக் காணி"** யும்கொடுக்கப்பட்டது. **"பதியிலார்க் காணி"**, **"சாக்கைக் காணி"**, **"வீணைக் காணி"**, **"உவச்சக்காணி"** போன்றவற்றை இந்த மக்கள் பெற்றனர். அன்றைய வாழ்க்கை முறையைத்தெரிந்து கொள்ளாமல், செல்வராஜ் கொச்சைப்படுத்தி எழுதிவிட்டார்.

14. அம்மாவும், பெண்ணுமாக, தங்கள் தாசிக் குலத்தை நொந்து கொள்ளும் வசனத்துக்கிடையே, பெரியாழ்வார் பெற்ற பெண்ணான தான், தாசிக்குப் பிறந்ததால், தாசியாகவே வாழ வேண்டுமா என்று ஆண்டாள் எண்ணுவதாக செல்வராஜ் எழுதுகிறார். அப்பொழுது தான் ஆண்டாளுக்குப் பெரியாழ்வார் தனது தந்தை என்று தெரிய வந்ததாம். தன் மனதில் அவள் அரற்றுகிறாளாம் -

"அப்பா, நான் தேவதாசியின் வயிற்றில் பிறந்ததனால் என் தலைவிதி இதுதானா ? படைப்பில்எல்லோரும் சமம் என்று பேசும் உங்கள் தத்துவம் சொல்லித் தந்தது இதுதானா ?"செல்வராஜ் போன்றோருக்கு பிடித்தமான பாயிண்ட் இது! ஆனால் சமதர்மத்தைப்பற்றிப் பேச செல்வராஜ் இப்படி ஒரு காட்சியைத் தர வேண்டுமா ? பெரியாழ்வார்பாசுரத்தைப் படித்திருந்தாலே தெரிந்திருக்குமே? பெரியாழ்வார் **வேயர்** குலத்தில் உதித்தவர். வேய் என்பது மூங்கிலைக் குறிக்கும். மூங்கில் கம்புகள் மீது நின்றாடும்கழைக்கூத்து அமைப்பு, ஸ்ரீவில்லிபுத்தூர்க் கோவிலில் செதுக்கப்பட்டுள்ளது. அந்தப்பகுதி ஒருகாலத்தில் மூங்கில் காடாக இருந்திருக்கலாம். மூங்கில் பகுதியில்வாழ்ந்தவர்கள் என்பதால் அந்த ஊருக்கும், அதில் வாழ்ந்த மக்களுக்கும் ஆதியில் **வேயர்** என்ற பெயர் ஏற்பட்டிருக்கலாம். அப்பொழுதே சுதை வடிவிலான வடபத்ர சாயி அங்கு கோவில் கொண்டிருக்கிறார். பின்னாளில் வில்லி என்பான் அந்தப்பெருமாளைக் கண்டெடுத்து கோவில் கட்டியிருக்கிறான். அவன் காலத்தில் புதிதாக நிர்மாணம் செய்யவே அது புத்தூர் என்றும், அவன் பெயரைக் கொண்டு வில்லிபுத்தூர்என்றும் பெயர் பெற்றது. அதற்கு முந்தின காலத்திலேயே அந்தப் பகுதியில் இருந்தவேயர் மக்கள் குடியில் பெரியாழ்வார் தோன்றியிருக்க வேண்டும். வேயர் என்பதற்கு இன்னொரு பொருளும் உண்டு. வேயர் என்றால் ஒற்றன் வேலை செய்பவன் என்றுபொருள். ஒற்று வேலை என்பது அரசுப் பணியாகும். பல தலைமுறைகளாக அவரதுமுன்னோர் ஒற்றுப் பணியில்

ஈடுபட்டிருக்கக்கூடும். ஒற்றுப் பணியில் இருந்தாலும் வீரர்களாக இருந்திருக்க வேண்டும். ஏனெனில் தன்னை **"வீரணி தொல் புகழ் விட்டுசித்தன்"** என்று பெரியாழ்வார் திருமொழி 4-6-10 இல் குறிக்கிறார். இன்னொரு இடத்தில் "பாழித்தோள் விட்டு சித்தன்" என்று சொல்லிக் கொள்கிறார் (பெரி-திரு -4-5-10). பாழி என்பதற்குப் பல அர்த்தங்கள் இருக்கின்றன. ஆனால் தோள் என்று சேர்த்துச்சொல்வதால், வலிமை, போர் என்னும் அர்த்தங்களே பொருத்தமாக இருக்கும். வீரத்துக்குப் பெயர் போன மரபில் அவர் வந்தவராக இருக்க வேண்டும். நாளடைவில்,அவரது முன்னோர்கள் வேயர்களாகப் பணியாற்றியிருக்க வேண்டும். அதனால் இவர் வேயர் குலத்தவராகிறார். வேயர் குலத்தில் பிறந்த இவர் பாடின திருப்பல்லாண்டைக் கேட்டுத்தான் இன்றைக்கும் எல்லா கோவில்களிலும் பெருமாள் நாளை ஆரம்பிக்கிறார். இவர் பாடின **சென்னியோங்கு** முதலான பத்துப் பாசுரங்களே, மோட்சத்து வழிகாட்டும் சாதனம் என்று வைணவ ஆச்சாரியர்கள் அறுதியிட்டுச் சொல்லியிருக்கிறார்கள். அதில் **"வேயர் தங்கள் குலத்துதித்த விட்டு சித்தன் மனத்தே கோவில் கொண்ட கோவலன்"** என்னும் அந்த நாராயணனை அந்தப் பத்துப் பாசுரங்களால் பாட வல்லார் இறைவனுக்கு அணுக்கர்கள் ஆவார்கள் என்று முடிக்கிறார். உயர் குலம் என்று சொல்லப்படுகிறவர்கள் உள்ளிட்டோர் அனைவருமே இந்தப் பாசுரங்களைப் பாடிப்பாடியே உய்யும் வழி தேடுகின்றனர். சமத்துவம் பற்றிப் பேச செல்வராஜ் விழைந்தால், வேயர் குலத்துதித்த பெரியாழ்வாருக்கு வைணவத்தில் கொடுக்கப்பட்டுள்ள உயர்வையும், மேன்மையையும் பற்றிப் பேசியிருக்கலாம். ஆனால் அவரையல்லவா இழிவுபடுத்திப் பேசி விட்டார்?

15. செல்வராஜின் காமக் கண்ணில் எல்லாமே காமமாகத் தெரிகிறது. கோவிலி நடனமாடும் பெண்ணைப் பார்த்து உள்ளம் அரிப்பெடுத்த தாம், உடல் தினவெடுத்ததாம். இதெல்லாம் நடந்தது விட்டுசித்தருக்கு. பெரியாழ்வாரை **விட்டு சித்தன்** என்று தான் மக்கள் அழைத்தனர். சதா சர்வ காலமும் விஷ்ணுவையே அவர் நினைத்துக் கொண்டிருந்ததால் அவருக்கு அந்தப் பெயர் ஏற்பட்டது. அப்படிப்பட்டவரை சபலசித்தராக வர்ணிப்பது மன்னிக்க முடியாத குற்றம். வைணவ மரபில் ஒன்று சொல்வார்கள். இறைவன் தனக்கு யாரேனும் அபசாரம் செய்தாலும் பொருட்படுத்தமாட்டான். ஆனால் தனது பக்தனுக்கு அபசாரம் செய்தால் பொறுக்க மாட்டான்.தெய்வத்தாலும் பொறுக்க முடியாத குற்றத்தை செல்வராஜ் செய்துள்ளார்.

16. பூமாலை தொடுத்து, அதை இறைவனுக்கு சாற்றி அழகு பார்த்த விட்டுசித்தர் சாதாரண மானுடப் பெண்ணின் அழகைப் பார்த்து மனம் தடுமாறி இருக்கவே முடியாது. அப்படி தடுமாறி இருந்தாலும், அதை

மறைக்கும் பழக்கம் வைணவத்தில் இருந்ததில்லை. உள்ளதை உள்ளபடியே எழுதி வைத்துள்ளார்கள். உதாரணமாக **தொண்டரடிப்பொடி ஆழ்வார்**, பூர்வத்தில் ஒரு வேசியிடம் மயங்கியிருந்ததை மறைக்கவில்லை. **திருமங்கை ஆழ்வார்** வழிப்பறி செய்ததை மறைக்கவில்லை. பெரியாழ்வார் வாழ்விலும் அப்படிச் சம்பவங்கள் நடந்திருந்தால் அதை மறைத்திருக்கமாட்டார்கள். மேலும் மனம், மொழி, மெய் ஆகியவற்றில் எந்த விஷ்ணு பக்தனும் பிறழ்ந்ததில்லை என்ற நிலை இருந்தது. இந்தக் கதையை எழுதுவதற்கு முன், ஒரு சிறு ஆராய்ச்சி முயற்சியாக, ஆழ்வார்கள் சரித்திரத்தை செல்வராஜ் படித்திருந்தால், தெரிந்திருக்கும். ஸ்ரீ வைஷ்ணவர்கள் தவறு செய்தவர்களாக இருந்தால் தன்னைப் பாம்பு தீண்டிக் கொல்க என்று சொல்லி பாம்பு இருந்த குடத்தில் கையை விட்டார் **குல சேகர ஆழ்வார்**. பாம்பு அவரைத் தீண்டவில்லை என்ற சம்பவத்தின் மூலம், விஷ்ணு பக்தர்கள் தவறிழைக்க மாட்டவே மாட்டார்கள் என்ற நம்பிக்கை அன்றைக்கு எந்த அளவுக்கு இருந்தது என்பது தெரிய வந்திருக்கும். பெருமாள் திருமேனியிலேயே எண்ணத்தைச் செலுத்தும் ஆழ்வார் போன்றவர்களுக்கு, எந்தப் பெண்ணின் புற அழகும் சலனப்படுத்தாது. இன்னும் சொல்லப் போனால் புற அழகையே உருமாற்றக் கூடிய சக்தி படைத்தவர்கள் ஆழ்வார்கள் என்பதைத் **திருமழிசை ஆழ்வார்** வரலாற்றின் மூலமாகத் தெரிந்து கொள்ளலாம். ஒரு கிழவிக்கு இளமையைக் கொடுத்தவர் இந்த ஆழ்வார். அந்த கிழவி செய்து வந்த தொண்டில்மனம் குளிர்ந்து அவள் கேட்டுக் கொண்டதன் படி அவளுக்கு இளமை திரும்புமாறு வரம் கொடுத்தார் திருமழிசை ஆழ்வார். அவள் அடைந்த இளமையும், அழகும் எப்படிப்பட்டதென்றால், அந்த நாட்டுப் பல்லவ அரசன் அவள் அழகில் மயங்கி அவளைத் திருமணம் செய்து கொள்கிறான். அப்படிப்பட்ட சக்தி வாய்ந்த ஆழ்வார்களுள் ஒருவரான பெரியாழ்வார், சபலத்துக்கு இடம் கொடுத்தவராகச் சித்தரித்தது, எழுதியவரது வக்கிர புத்தியைக் காட்டுகிறது.

17. அடுத்த வக்கிரம், பெரியாழ்வாருக்குப் பொருள் மேல் ஆசையாம். அதற்காகத்தான் மதுரைக்குச் சென்று விவாதத்தில் கலந்து கொண்டாராம். ஆழ்வாரது பெருஞ்செல்வம் அகாரம்தான். எல்லாவற்றுக்கும் ஆரம்பமாகவும், மூலமாகவும் இருக்கின்ற 'அ'என்னும் எட்டெழுத்துக்களால் அறியப்படுகின்ற அகார வாச்யனான நாராயணனையே தனமாகக் கொண்ட அவர், அந்த அகாரத்தையே விவரித்து விவாதத்தில் வென்றார்.அந்த விவாதத்திற்குத் தாமாகவே அவர் செல்லவில்லை. அவர் வணங்கி வந்த வடபத்ரசாயி பெருமான் கனவில் தோன்றி அவரைச் செல்லுமாறு பணிக்கவே அவரும்சென்றார். சென்று வென்ற தனத்தையும் வடபத்ர சாயிக்கே

உரியது என்று சமர்ப்பித்தார். **“வடபெருங்கோயிலுடையான் திரு முன்பே வைத்து ‘தேவரீராலேஉண்டான தனம் தேவரீருக்கே’ என்று தெண்டன் சமர்ப்பித்தார்”** என்று ஆழ்வார்கள்சரித்திரத்தைக் கூறும் குரு பரம்பரைப் பிரபாவம் என்னும்நூல் கூறுகிறது. அந்ததனத்தைக் கொண்டுதான் அவர் கோவிலை விரிவாகக் கட்டியிருக்க வேண்டும் என்றுசொல்லப்படுகிறது. அப்படிப்பட்டவரை பணத்துக்கு ஆசைப்பட்டு விவாதத்துக்குச்சென்றார் என்று வாய் கூசாமல் சொல்கிறார் செல்வராஜ்!

18. எல்லாவற்றையும் தியாகம் செய்தால்தான் இறைவனுக்கு அருகாமையில் செல்லமுடியும் என்பது வைணவக் கருத்து. ‘‘சகல தர்மங்களையும் தியாகம் செய்து விட்டுவா, உன்னைப் பீடிக்கும் எல்லா பாபங்ளிலிருந்தும் நான் காப்பாற்றி உனக்கு மோட்சம்தருகிறேன்’’ என்று தேர்த் தட்டில் நின்று அர்ஜுன்னுக்கு கிருஷ்ணன் சொன்னவாக்கைத் தலையாய வாக்காகப் பின்பற்றும் வைணவர்கள் இன்றும் இருக்கிறார்கள்.அவ்வாறு இருக்க, 1000 வருடங்களுக்கு முன் விட்டுசித்தராக இருந்த ஆழ்வார் பணத்துக்கு ஆசைப்பட்டா விவாதத்துக்குச் சென்றிருப்பார்? ஒன்று பாக்கியில்லாமல் எல்லா விதத்திலும் character assassination செய்திருக்கிறார் செல்வராஜ்.

19. பாண்டிய அரசன் ஸ்ரீ வல்லபன் மிகவும் பராக்கிரமம் கொண்டவன். இவன் குண்ணூர், சிங்களம், விழிஞம் போன்ற இடங்களில் போரிட்டு வென்றவன். இவன்பெற்ற ஈழத்து வெற்றியை மகாவம்சம் குறிப்பிடுகிறது. இவனது வெற்றிகளைப் பறைசாற்றும் சின்னமனூர்ச் செப்பேடுகள் **“வாடாத வாகை சூடிக் கோடாத செங்கோல்நடப்ப”** என்று புகழ்கின்றன. வளையாத செங்கோலை உடைய மன்னன் பிரம்மதேயமான ஊரில் காமக் கண்ணுடனா செல்வான்? இந்த மன்னன் பலபோர்களையும் வென்றவன் என்பதைப் பெரியாழ்வாரும் தன் பாடலில் குறித்துள்ளார். **“குறுகாத மன்னரைக் கூடி கலக்கி வெங்கானிடைச் சிறுகால் நெறியே போக்குவிக்கும் செல்வன்”** என்று கூறுயுள்ளது இம்மன்னனையே. அப்படிப்பட்ட வெற்றிகளைப் பெற்றமன்னன் பெற வேண்டியது ஒன்று இருந்தது. அது மறுமைக்குத் தேவையானசெல்வம். ஒரு முறை மதுரை நகரில் இரவு சோதனைச் சென்ற போது திண்ணைஒன்றில் படுத்திருந்த ஒரு பார்ப்பனனைக் கண்டு ‘நீ யார்?’ என்று வினவ, அவன் தான்கங்கையாடி வந்ததாகச் சொன்னான். அவன் கற்றுக் கொண்ட வந்த விஷயத்தைப்பற்றி மன்னன் வினவ, அவன் ‘மழைக்காலத்துக்கு வேண்டியதை மற்ற எட்டு மாதங்களிலும், இரவுக்கு வேண்டியதைப் பகலிலும், முதுமைக்கு வேண்டியதை இளமையிலும், மறுமைக்கு வேண்டியதை இம்மையிலும்

தேடுக" என்ற பொருள் படும் ஸ்லோகத்தைச் சொன்னான். அரசனிடம் எல்லாம் இருந்தது. ஆனால் மறுமைக்கு என்ன வேண்டும் அதை இம்மையில் எவ்வாறு தேட வேண்டும் என்பது தெரியவில்லை. அதைப் பற்றித் தனது புரோகிதரான செல்வ நம்பியிடம் வினவ, அவர் வித்வான்களை அழைத்து, அவர்களிடமிருந்து தெரிந்து கொள்ளலாம் என்றார். அப்படிவந்தவர்தான் பெரியாழ்வார். அவர் பரதத்துவத்தை நிலைநாட்ட, அவரால் ஈர்க்கப்பட்ட அரசன் ஸ்ரீ வல்லபன், அவருடைய சிஷ்யனானான் என்று ஆதார நூல்கள் கூறுகின்றன. அப்படிப்பட்டவன் அவரது மகளான ஆண்டாளைப் பார்த்துக்காமுறுகிறானாம். அவரையே கைது செய்கிறானாம் (அவனது சிப்பாய்கள் ஆழ்வாரைப் பிடித்து கோவில் சன்னிதியிலே நிறுத்தினராம்). இதெல்லாம் என்ன கற்பனையோ !இந்து மதப் பெரியவர்களைக் கேவலப்படுத்த வேண்டும் என்று நினைப்பவர்களால்தான்இப்படியெல்லாம் எழுத முடியும்.

பெருமாளுக்குக் கண்ணடி படக்கூடாதே என்று பல்லாண்டு பாடியவர் பெரியாழ்வார். அவர் பரதத்துவம் நிர்ணயம் செய்தபின், பட்டர்பிரான் என்ற பட்டத்தைப் பெற்று, அரசனது பட்டத்து யானையின் மீது ஊர்வலம் வரும் போது, மகன் பெறும் பெருமையைக் காண, தாய் தந்தையர் நேரே வந்து பார்ப்பது போலநாராயணனே, பிராட்டியுடன் கருடன் மீது ஆரோஹணித்து அவருக்குக் காட்சி தர, பெரியாழ்வாருக்குக் கவலை வந்து விடுகிறது. அரக்க,அசுரர்கள் வாழும் பூமியாக இருக்கும் கலி காலம் இது. அந்தக் கலியால் இருள் சூழ்ந்திருக்கும் நேரத்தில் ஒளிமயமாக இந்தத் தெய்வம் காட்சி தருகிறானே, இவனுக்குக் கண்பட்டுவிடாதோ, அதனால் தீங்கு வந்து விடாதோ என்று கவலையுற்று, இறைவன்பல்லாண்டு வாழவேண்டும் என்று வாழ்த்துகிறார். திருப்பல்லாண்டு பாடுகிறார். அப்படிப்பட்ட அவருக்கு இந்தக் கலியுக செல்வராஜால் சொல்லடி கிடைக்கிறது. **"பின்னைகொல், நிலமாமகள் கொல், திருமகள்கொல் பிறந்திட்டாள்"** - இவள்நப்பின்னையோ, பூதேவியோ, ஸ்ரீதேவியோ என்று பெரியாழ்வார் ஆச்சரியப்பட்ட ஆண்டாளுக்கு, செல்வராஜ் உபயத்தில் புது அரிதாரம் கிடைத்திருக்கிறது.

பெருமாளுக்குக் கண்ணடி படக்கூடாது என்று பதறிய ஆழ்வார் மீது சொல்லடிவிழுகிறதே இதுதான் கலியின் இருள் என்பதா ? கலி இருளில் ஞானச் சுடர்விளக்கேற்றப் பாடினாரே அதற்கு இதுதான் கைமாறா ? **ஐயைந்துமைந்தும் அறியாதமானிடரை வையம் சுமப்பதும் வம்பு** என்று 30 திருப்பாவை பாசுரங்களையும்அறியாதவர்களை இந்தப் பூமி சுமப்பதால் வம்புதான் நேரிடும் என்றார்களேஅதுதான் இப்பொழுது நடந்து கொண்டிருக்கிறதா ?. செல்வராஜ் போன்றவர்களைஇன்னும் சுமந்து

கொண்டிருக்கிறோமே என்று இந்த வையம் அழுதுகொண்டுதானே இருக்கும்?

நோன்பு என்ற தலைப்பிட்டு, அந்தத் தலைப்பை எப்படியாவது கதைக்குள் நுழைக்கமுயன்ற செல்வராஜ், கடைசி வரியில் அதைக் கொண்டு வருகிறார். 'அந்த மூன்றுபேர்கள் நோன்பு ஆரம்பமாயிற்று'' என்கிறார். அந்த மூன்று பேர், பெரியாழ்வார், ஆண்டாள், ஸ்ரீ வல்லபன் என்பது செல்வராஜது நினைப்பு. உண்மையில் இவரைப்போன்றவர்களைப் பெற்றதனால், இந்த பூமித்தாய்தான் நோன்பிருக்க வேண்டும் - இனியும் செல்வராஜைப் போன்றவர்கள் பிறக்கக்கூடாது, இப்படிப்பட்டவர்களை தான் சுமக்கக்கூடாது என்று அவள் எப்படி பரிதவித்துக் கொண்டிருப்பாள்? ஆண்டாளாகப் பிறந்து அன்று நமக்கு ஞானச்சுடர் ஊட்டின பூமாதேவி, இன்று அந்தச் சுடரை அணைக்கப்பார்க்கும் எல்லாப் பதர்களிடமிருந்தும் நம்மைக் காக்க நோன்பிருக்கத்தான் வேண்டும்.

><><><><><><><><><><><><><><><><><><><

# 6. கோயில் நடனப் பெண்கள்

Jayasree Saranathan http://jayasreesaranathan.blogspot.com/2018/01/blog-post.html

July 4, 2012

(நோன்பு என்கிற தலைப்பில் ஸ்ரீ ஆண்டாளைப் பற்றி எழுதிய அவதூறு கட்டுரையில் டேனியல் செல்வராஜ் என்பவர் கோயில் நடனப்பெண்களைப் பற்றி எழுதிய கூற்றுக்கு உண்மை விளக்கம்)

கோவிலில் அடியவர்களாகச் சேர்ந்தவர்கள் பெண்கள் மட்டுமல்ல. ஆண்களும் பலர் இருந்தனர். அதிலும் திருமணாமாகாத ஆண்கள் கோவில் காரியங்களில் ஈடுபட்டுள்ளனர். "தளிப்பணிச் செய்மாணி" என்னும் சொல்லாட்சி கோவில் காரியம் செய்யும் பிரம்மச்சாரியைக் குறிக்கிறது என்பதை நியமம், ஐராவுதீஸ்வரர் ஆலயக் கல்வெட்டின் மூலம் அறிய முடிகிறது.

பெண்கள் மட்டுமல்ல, ஆண்களும் கோவிலில் நடனமாடி இருக்கின்றனர். அதிலும் திருமணமாகாத ஆண் நடனமாடிய விவரத்தை ராமநாதபுரத்தை ஆண்ட விஜய ரகுநாத சேதுபதி அவர்களால் வெளியிடப்பட்ட செப்பேட்டில் காணலாம் (கி.பி. 1714). ராமேஸ்வரம் ராமலிங்க ஸ்வாமி திருக்கோவிலில் திருப்பணி நடைபெற்றபோது, கோவிலில் சபை கூடியிருந்தனர். அப்பொழுது, நாராயணப்புலவர் மகன் ஆதித்தனாலங்கராயன் என்பவனின் கைப்புத்திரனான முதுகுளத்தூரில் வசிக்கும் குமாரப்புலவன் மகன் அச்சபையில் 'வெகுசாரி" ஆட்டம் ஆடினான். அதைப் பாராட்டி அவனுக்கு "விசைய ரெகுநாத அனுமக் கொடினாலங்கராயன்" என்னும் சிறப்புப் பெயர் கொடுக்கப்பட்டது. மேலும் அவனுக்குத் திருமணம் செய்யும் போது பெண் வீட்டார், பிள்ளை வீட்டாருக்கு ஒவ்வொரு பணமும், தின்மைகள் நடக்கும் போது ஒரு பணமும், குடும்புக்கு ஒரு பணமும், அது தவிர பள்ளு ஒன்றுக்கு ஒரு குறுணியும் கொடுக்கக் கட்டளையிடப்பட்ட செய்தி அந்தச் செப்பேட்டில் காணப்படுகிறது. (ஆதாரம் :-தமிழ் நாடு அரசு தொல்லியல் துறையின் காலாண்டிதழ், ஜனவரி 2010).

நாலங்கராயன் என்றால் நாலு அங்கம் ராயன். நாங்கு அங்கங்களையும் ஆட்டி அபிநயம் செய்வதைக் குறிப்பதாகும், வெகுசாரி ஆட்டம் என்பது, வேடம் கட்டி ஆடும் ஆட்டம், அதாவது உருமாறி ஆடுதல் என்பர். பெண்ணுருக்கொண்டு ஆடினானோ தெரியாது. ஆனால் நடனம் கற்றுணர்ந்த பிரம்மச்சாரிகள் கோவிலில் நடனம் ஆடுவது வழக்கம் என்று தெரிகிறது. இவர்களது அக வாழ்க்கையை அறிந்து கொள்ள

யாரும் ஆர்வம் காட்டுவதில்லை. ஆனால் பெண்கள் நடனமாடினர் என்றால் கற்பனை எங்கோ பறந்து விடுகிறது.

இந்த நடனக்காரரது திருமணத்தின் போது செய்யவேண்டிய கொடையைப் பற்றி செப்பேடு தெரிவிப்பதால், இவர்கள் திருமணம் செய்து கொள்ளத் தடை ஏதும் இல்லை என்று தெரிகிறது.

கோவில் பணியில் இருப்பவர்களது அக வாழ்க்கை தூய்மையானதாக இருக்க வேண்டும் என்று சொல்லும் வண்ணம் பார்த்திவசேகரபுரச் செப்பேடுகளில் (சுமார் 1000 வருடங்களுக்கு முந்தினது), ஆண்கள் அங்குள்ள கல்விச் சாலையில் கல்வி பயிலும் காலத்தில், மண உறவில் ஈடுபடக்கூடாது என்ற கட்டளை காணப்படுகிறது. இது, கோவில் வளாகத்தில் சம்பந்தப்படும் மக்கள், அக வாழ்க்கையில் தூய்மையும், நேர்மையும் கொண்டவர்களாக இருக்க வேண்டும் என்ற நியதியைக் காட்டுகிறது. அவ்வாறிருக்க, கோவிலில் நடனமாடும் பெண்கள், காமக் கிழத்திகளாக இருந்தனர் என்பது ஆதாரமில்லாத கருத்து

பதியிலார் என்ற சொல்லில் பதி என்பதைக் கணவன் என்று பொருள் கொண்டு கணவன் இல்லாதவர், என்ற கருத்து எழுந்துள்ளது. தெய்வத்தையே பதியாக வரித்தவர்கள் என்றால், பதியிலார் என்று ஏன் அழைக்கப்பட்டிருக்க வேண்டும்? இந்தச் சொல் ராஜராஜன் போன்ற மாமன்னர்களது ஆணைப்படி வெட்டப்பட்ட கோவில் கல்வெட்டுகளில் காணப்படுவதால், அந்தப் பெண்கள் நெறிப்படி வாழந்தவர்களாகத்தான் இருக்க வேண்டும். பதி என்னும் சொல்லுக்குத் தவறாகப் பொருள் காணவே இந்த நிலை.

கல்வெட்டுச் சொல்லாட்சிகளை நாம் ஆய்ந்தால், பதி என்னும் சொல் நகரம், அல்லது ஊர் என்னும் பொருளில் வந்துள்ளதைக் காணலாம். முதலாம் ராஜேந்திர சோழனின் இரண்டாம் மகனான இரண்டாம் ராஜேந்திர தேவனின் ஆட்சிக் காலத்தில் (கி.பி 1051 ஶி 1068) செங்கல்பட்டு மணிமங்கலம் ராஜகோபாலப் பெருமாள் கோவிலில் வைக்கப்பட்ட கல்வெட்டில் 'நதிகளும் நாடும் பதிகளும்' என்ற தொடர் வருகிறது. இதில் பதி என்றால் நகரம் அல்லது ஊர் ஆகும். எனவே தனது பதியை (ஊரை) விட்டு விட்டு தெய்வமே கதி என்று வந்தவர்களைப் 'பதியிலார்' என்றழைக்கும் வழக்கம் வந்திருக்க வேண்டும். இவர்கள் பலவித கோவில் பணிகளச் செய்துள்ளனர். இவர்களில் சிலர் ஆடல், பாடலும் செய்திருக்கின்றனர் என்பதே உண்மை நிலவரம் என்பதைக் கல்வெட்டுகள் காட்டுகின்றன.

தளியிலார் என்ற சொல் அளியிலார் என்றும் காணப்படுகிறது. இவர்களைத் தளிச் சேரிப் பெண்டுகள் என்று தஞ்சைக் கல்வெட்டு கூறுகிறது. தளி என்றால் கோவில் என்று பொருள். தளிப் பரிவாரம் என்ற சொல் பல்லவர் காலத்திலிருந்தே காணப்படுகிறது. கோவில் பணியாளார்கள் அனைவருமே தளிப் பரிவாரத்தைச் சேர்ந்தவர்கள்தாம். அவர்களுள் நாட்டியமாடுபவர்களும் இருந்திருக்கிறார்கள். இரண்டாம் நந்திவர்மன் காலத்து முந்தீஸ்வரர் கோவிலில் இருந்த தளிப் பரிவாரத்தில் மூன்று மறையவர், இரண்டு தட்டளி கொட்டுபவர், 44 தேவரடியார்கள், இந்தத் தேவரடியார்களுக்கு உணவளிக்க தவசிகள், கோவிலை விளக்கும் 12 தவசிகள், அவர்கள் அனைவரையும் கவனித்துக் கோவில் நிர்வாகம் செய்யும் "தளி ஆழ்வார்கள்" என்று பலரும் இருந்தனர். இங்கு சொல்லப்பட்ட தேவரடியார்கள் அனைவருமே நடனப் பெண்கள் அல்லர். அவர்கள் பல் வேறு கோவில் காரியங்களைச் செய்தனர். இவர்கள் நிச்சயமாக விலைமாதர்களாகவும், காமக் கிழத்திகளாகவும் இருந்திருக்க முடியாது. அப்படிச் சொல்பவர்கள் செல்வராஜ்தனமான அறிவு கொண்டவர்களாகத்தான் இருக்க முடியும்.

இது தவிர தளிச்சேரி என்ற இடமும் கோவிலில் இருந்திருக்கிறது. இது கோவிலின் உட்பகுதியில் அமைந்த வாழ்விடம் என்பதைக் கல்வெட்டு மூலம் அறியலாம் (S.I.I. Vol XIII, p1). எனவே இந்தப் பெண்டுகள் நெறியற்று வாழ்ந்தார்கள் என்று சொல்வது தவறு.

இனி இலக்கியம் காட்டும் காட்டும் கருத்துக்களைப் பார்ப்போம்.

பரத்தையர் என்ற சொல் வடிவம் சங்க இலக்கியத்தில் பரக்கக் காணலாம். ஒரு விலை போட்டு தங்களை விற்றுக் கொள்பவர்கள் என்று காட்டும் 'பூவிலைப் பெண்டு" என்ற சொற்றொடர் புறநானூ று 293 இல் வருகிறது. பெண்மையைப் பூவாகவும், அதை விலைக்குக் கொடுப்பவர்கள் இந்த மாந்தர் என்றும் இந்தச் சொல்லாட்சி காட்டுகிறது, இக்கருத்தை நிலை நாட்டி, புறநானூறு 32 இல் 'விறலியர் பூவிலை பெறுகென" விறலியருக்குப் பூவிலையாக மாட மதுரையையே சோழன் நலங்கிள்ளி கொடுத்து விடுவான் என்று கோவூர் கிழார் பாடியுள்ளார். விறலியர் என்பார் பாணன் என்னும் சொல்லுக்குப் பெண்பால். இவர்கள் அபிநயித்துப் பாடி ஆடுவர். உள்ளக் குறிப்பை புறத்தில் காட்டுபவர் விறலி எனப்படுவர், அந்த விறலியருக்கு, மன்னன் பூவிலை கொடுக்கிறான் என்றால், அதன் பொருளை ஊகித்துக் கொள்ளலாம். விலை கொடுத்துப் பெறப்படவே அந்த மகளிர் விலைமாது என்றழைக்கப்படும் சொல்லாட்சி இன்றும் இருக்கிறது. புறநானூறு தொட்டு அந்தச் சொல்லாடல் இருக்கவே,

தமிழ்ச் சொல்லாட்சியில், விலை என்னும் குறிப்பைக் கொண்டே அந்த வகை மகளிர் அழைக்கப்பட்டிருக்கின்றனர் என்பது புலனாகிறது.

அவ்வாறு இருக்க பதியிலாரையும், தளியிலாரையும், விலைமாதர்களாகவும், காமக் கிழத்திகளாகவும் காட்டி வந்தது, அறியாமையும், வக்கிரமும் கலந்த கலப்பே. அரசாட்சி அழிந்த பிறகு, பலதரப்பட்ட மக்களைப் போல இவர்களும் கொடுமைகளுக்கு ஆளாயினர். இங்கு நாம் சொல்ல வருவது, கோவில் கலாசாரத்தில் இப்படி ஒரு நிலை இல்லை என்பதே.

சிலப்பதிகாரம் போன்ற நூல்களைப் பார்த்தால், அதில் மிகத் தெளிவாக பலதரப்பட்ட பெண்டிரைப் பற்றி சொல்லப்பட்டுள்ளது. மாதவி விலைமாது அல்ல, அவள் நாட்டியக் கணிகை ஆவாள். அவள் இந்திர லோகத்து ஊர்வசியின் வழி வந்தவள் என்று இளங்கோவடிகளும், அடியார்க்கு நல்லாரும் கூறுவர். அவர்களது ஆட்டத்தை மெச்சி தலைக் கோலி என்ற பட்டம் தரப்பட்டது. அந்தப் பட்டத்துக்கு 1008 கழஞ்சு பொன் தரப்பட்டது. இது புகாரில் (சோழ நாட்டில்) மட்டுமல்ல, பாண்டிய நாட்டிலும் இருந்து வந்த வழக்கம் தான் என்பதை ஊர்க்காண் காதையில் காணலாம். நாட்டியக் கணிகையருக்கான விதி முறைகள் சிலப்பதிகாரக் காலத்துக்கும் முன்பே இருந்திருக்கிறது என்பதை "விதிமுறைக் கொள்கை"ப்படி 1008 கழஞ்சு பெறுமான மாலையை அரசன் கொடுத்தனன் என்று சிலப்பதிகாரம் சொல்வதன் மூலம் தெரிகிறது. அந்த மாலையை வாங்கும் சக்தியுள்ளவன் அவளுக்குக் கணவனாவான். அவளை விலைமாதுவாக இங்கு காட்டவில்லை. ஆயினும் அந்த வாழ்க்கை துன்பமயமானது (கணவன் ஏமாற்றி விட்டால்). அதனால் தன் மகளான மணிமேகலையை நாட்டியக் கணிகையாக ஆக்கக்கூடாது என்று மாதவி தன் தாயிடம் கூறுகிறாள். இதன் மூலம் நாட்டியக் கணிகை வாழ்க்கை, தவிர்க்க முடியாததோ அல்லது நிர்பந்தப்படுத்தப்படுவதோ அல்லது வழிவழியாக வருவதோ அல்ல என்று தெரிகிறது. சொந்த விருப்பத்தின் பேரில்தான் அவர்கள் நாட்டியக் கணிகையராக இருந்திருக்கின்றனர்.

இந்தத் தலைக்கோலிகளைப் பற்றி கல்வெட்டுகள் பேசுகின்றன. ஜெயங்கொண்ட சோழத் தலைக் கோலி என்றும், ஒலோக மாதேவி தலைக்கோலி என்றும் பெயர்கள் காணப்படுவதால், அரசன், அரசி பெயரில் தலைக்கோலி பட்டங்கள் வழங்கப்பட்டிருக்கின்றன என்று தெரிகிறது. விலைமாதர்களாக இவர்கள் இருந்தால் இப்படி அரசி பெயரிலும் பட்டம் கொடுக்கப்பட்டிருக்க மாட்டாது.

மேலும் இந்தத் தலைக்கோலிகள் கோவில் கல்வெட்டுகளில் பதியிலார், மற்றும் நக்கன் என்னும் பெயருடன் சொல்லப்பட்டுள்ளனர். நக்கன்

என்பார் சிவன் கோவில்களில் நாட்டியமாடும் மகளிர் ஆவார். (A.R.E. 341 /1921). இந்த நாட்டியங்களை ஏற்பாடு செய்வதற்கான செலவுக்காக "நக்கக் கடமை" என்னும் தொகையும் கொடுக்கப்பட்டது. (S.I.T.I Vol III, pt., 2.p. 1451 S.I.I. Vol II No 66). மாதவியும் விரும்பியிருந்தால் கோவிலில் பதியிலாராகவும், நக்கனாகவும் ஆகியிருக்கலாம். அவள் காலத்திலும் பிறவா யாக்கைப் பெரியோன் கோவில் இருந்தது. ஆனால் நாட்டிய அரங்குகள் கொண்ட பெருங்கோவில்களாக அப்பொழுது கோவில்கள் இருந்தனவா என்பது ஆய்வுக்குரியது.

கோவில்கள் கற்றளியாக கட்டப்பட்ட காலம் பல்லவர் தொடங்கித்தான் ஆரம்பித்தது. **3000** ஆண்டுகளுக்கு முன் (குஜராத், கச்சுப் பகுதியிலிருந்து / சிந்து சமவெளி நாகரிகம் தொய்வடைந்த காலம்) காஞ்சியில் குடியேறிய கல் தச்சர்களது திறமையைப் பல்லவர்கள்தாம் முதலில் பயன்படுத்திக் கொண்டனர். அதற்கு முன்பே இமயத்தில் புலிச் சின்னம் பொறிக்க, கச்சியிலிருந்து கல்லைத் தகர்க்கும் உளி என்னும் செண்டைக் கரிகாலன் எடுத்துச் சென்றான். (காண்க http://jayasreesaranathan.blogspot.in/2012/03/vedic-kurma-excavated-near.html )

தேவதாசிகள் என்ற குறியீட்டில் எந்தப் பிரிவினரும் சிலப்பதிகாரத்தில் சொல்லப்படவில்லை. பட்டினப்பாக்கத்திலும், மதுரையின் புறப்பகுதியிலும், இருந்த தெருக்கள், அங்கு வாழ்ந்த மக்கள் பற்றி சிலப்பதிகாரம் விவரிக்கிறது. அதில் பலவிதமான வர்ணனைகள் வருகின்றன. ஆடல், பாடல், கூத்து, கணிகை, காமக் கிழத்தி என்று பலவிதங்கள் சொல்லப்பட்டுள்ளன. அவை அனைத்தும் ஒருவித மக்களையே குறிக்கவில்லை.

உதாரணமாக 'காவற் கணிகையும், ஆடற் கூத்தியரும் பூவின் மடந்தையரும்' இருந்த இருக்கைகள் (இருப்பிடங்கள்) சொல்லப்படுகிறது. தற்காலத்தில் இவற்றை ஜாதிகள் என்று சொல்லிவிடுவார்கள். ஆனால் அவரவர் செய்த செயல்களின் அடிப்படையில் இந்தப் பெயர்கள் எழுந்தன. அதன்படி பூவின் மடந்தையர் மட்டுமே விலைமாதர்களாக இருக்க வேண்டும்.

கணிகையர் என்ற சொல் உண்மையில் ஆய கலைகள் **64** உம் அறிந்தவர்களைக் குறிக்க எழுந்த்து. ராமாயண காலத்திலேயே இந்தக் கலைகள் அறிந்த கணிகையர் இருந்தனர். அவர்கள் அரசுப் பணியாளர்களாக இருந்தனர். பெண் வாசனையே அறியாதவரும், காட்டை விட்டு அகலாதவருமாக இருந்த ருஷ்ய ஸ்ருங்கர் என்னும் ரிஷியை, இந்தக் கணிகையர் மயக்கி நாட்டுக்குக் கொண்டு வந்தனர். இதை ஒரு அரசுப் பணியாகத்தான் பார்த்தார்கள். இந்த ருஷ்யஸ்ருங்கர்

தசரதனுக்காக செய்த புத்திர காமேஷ்டி யாகத்தின் காரணமாக ராமன் பிறந்தான்.

64 கலைகளும் அறிந்த கணிகையர் இருந்த வீதிகள் இரண்டு, மதுரையில் இருந்தன என்று சிலப்பதிகாரம் மூலம் அறிகிறோம். அந்தக் கலைகளில் ஒன்று நாட்டியமும். அதனால், மாதவியை நாட்டியக் கணிகை என்றழைத்தனர். ஆண்களும் இந்தக் கலைகளைக் கற்றனர், போஜ ராஜன் என்னும் மன்னன் 64 கலைகளும் அறிந்திருந்தான்.

இவற்றையெல்லம் வைத்துப் பார்க்கும் போது, கோவில் அடியார்களாகப் பணி புரிந்த மகளிர் இன்றைய மக்கள் நினைப்பதுபோல இல்லை. கோவில் கலாசாரமும், அரசின் பாதுகாப்பும் அழிந்தபட்ட பிறகு, அவர்களது நிலையும் வீழ்ந்திருக்கிறது என்பதே உண்மை.

(There are researches already done on Devadasi system . This link would give a good idea about it. http://www.history.ac.uk/reviews/review/169)

><><><><><><><><><><><><><><><><><><

(2ஆம் அட்டை தொடர்ச்சி)

தமிழ் இலக்கியங்களில் மூன்று வகை காதல்களைப்பற்றிப் பேசப்படுகிறது. ஒரு பெண் தனக்கு ஒத்ததான சமூக கௌரவம் உடைய ஆணிடம் முறையாக காதல் கொள்வது ஒரு வகை. தனக்கும் மேலான தகுதி உடைய நாட்டின் அரசனிடம் காதல் கொள்வது இன்னொரு வகை. இவை இரண்டுக்கும் மாறுபட்டதாக மானிடராய் பிறந்த பெண் இறைவனிடமே காதல் கொண்டு அவன் கரம் பற்ற விழைவது மூன்றாவது வகை. கடைசியாக சொல்லப்பட்டது பகவத் காமம் என்னும் இறைக்காதல். இறைவியின் அம்சமாக பிறந்த ஸ்ரீ ஆண்டாள் இறைவனிடமே ஒன்ற முற்பட்டது இயற்கை அல்லவோ! சங்கு,சக்கரம், வில், நாந்தகம், வனமாலை,கருடன் முதலாக இறைவனின் ஒவ்வொரு அம்சமாகவே பிறப்பிக்கப்பட்ட ஆழ்வார்கள் தங்கள் வாழ்க்கை கால முடிவில் அந்தந்த அம்சநிலைக்கே திரும்பி அடைந்தார்கள் என்பது வரலாறு. ஸ்ரீ ஆண்டாளும் அவ்வாறே இறைவனுடன் ஒன்றி மறைந்து போனாள் என்று வரலாற்று ஆசிரியர்கள் பதிவு செய்திருக்கிறார்கள். இதே போன்று திருப்பாணாழ்வாரும் திருவரங்கனை செந்தமிழ்ப்பாக்களால் துதித்தவாறே அவன் கருவறைக்குள் சென்று அவனுடனேயே ஐக்கியமாகி மறைந்து போனார் என்பதும் வரலாறு.

ஸ்ரீ ஆண்டாளின் திருப்பாவை "வேதம் அனைத்துக்கும் வித்து" என்று கொண்டாடப்படுகிறது. வருடம் முழுவதும் ஆலயங்களிலும் இல்லங்களிலும் பூஜையின் ஒரு முக்கிய அங்கமாக ஓதப்படுகிறது. அதே போல "நாச்சியார் திருமொழி"யும், நாலாயிர திவ்ய பிரபந்தம் ஓதப்படுகிற திருவிழாக்களில் தவறாமல் இடம் பெறுகிறது.

நாலாயிர திவ்ய பிரபந்தம் என்பதான ஆழ்வார்கள் அருளிச்செயல்கள், ஆழ்வார்களுடைய மிக உயர்ந்த இறை உணர்வையும், வேதங்களின் ஆழமான சாரார்த்தங்களையும் உள்ளடக்கியவை. இறை ஞானம் அருளப்பட்ட பேராசிரியர்களாலேயே அவற்றுக்கு பொருள் கூற இயலும். அப்படிப்படைக்கப்பட்ட ஆறாயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, பன்னீராயிரப்படி, இருபத்துநாலாயிரப்படி, முப்பத்தாறாயிரப்படி ஆகிய வியாக்கியானங்கள் மட்டுமே ஏற்று கொள்ளத்தக்கவை.

(தொடர்ச்சி பின் அட்டை)

ஏனெனில் இவற்றில் மட்டுமே ஆழ்வார்களின் இதய கமலத்திலிருந்து விம்மி எழுந்த செந்தமிழ்ச்சொல் ஒவ்வொன்றுக்கும் உண்டான உள்ளுறைப்பொருள்கள் ஐயந்திரிபற உரைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றின் அடிப்படையில் அமைந்த ஆராய்ச்சி நூல்களே ஏற்கத்தக்கவை. சாதாரண மொழி அறிவு கொண்டு முழங்கப்படுவது யாவும் வெறும் கடலோசைக்கு ஒப்பானவையே. இந்த புத்தகத்தில் தொகுக்கப்பட்டுள்ள கட்டுரைகள் இக்கருத்தை வலியுறுத்தி வரையப்பட்டுள்ளன. தமிழ் ஆர்வலர்களும் இறைஅன்பர்களும் படித்து தெளிவுபெற வேண்டுகிறோம்.

கட்டுரை ஆசிரியர்களுக்கு தமிழ் கூறும் நல்லுலகத்தின் நன்றி உரித்தாகுக.

** ஆழ்வார்களையும் * அருளிச்செயல்களையும்*
தாழ்வா நினைப்பவர்கள்தாம்* நரகில் வீழ்வார்கள்
என்று நினைத்து நெஞ்சே! * எப்போதும் நீ அவர்பால்*
சென்றணுகக் கூசித்திரி.

** அஞ்சுக்குடிக்கொரு சந்ததியாய் *ஆழ்வார்கள்
தம்செயலை* விஞ்சி நிற்கும் தன்மையளாய் - பிஞ்சாய்ப்
பழுத்தாளை ஆண்டாளைப் * பத்தியுடன் நாளும்*
வழுத்தாய் மனமே மகிழ்ந்து.

(உபதேசரத்தினமாலை என்னும் நூலில் ஸ்ரீ மணவாள மாமுனிகள் என்னும் ஆச்சாரிய பெருமகனாரின் திருவாக்கு)